# கல்கி

KALKI 10.6.90 ரூ. 2.50

வன்முறைக்கு வித்திடும் விளையாட்டுப் பொம்மைகள்!

எம். ஜி. ஆர். அமைச்சரவையில் அவர் சார்பாக இலங்கைப் பிரச்னையில் ஈடுபட்டு ராஜீவின் நம்பிக்கையையும் பெற்றிருந்தவர் பண்ருட்டி ராமச்சந்திரன். பிரச்னையை நன்கு ஆராய்ந்து அறிந்த நிலையில் அவர் இன்றையச் சூழ்நிலையையொட்டித் தமது கருத்தை வெளியிடுகிறார்:



# "விஷவட்டம் தெரிகிறது!"

பிரேமதாஸாவும் விடுதலைப் புலிகளும், இந்திய ராணுவத்தை வெளியேற்ற வேண்டும் என்ற ஒரே அம்சத்திற்காகக் கூட்டணி அமைத்துக் கொண்டனர். இந்திய ராணுவத்தை வெளியேற்றி விட்டால் பெரும்பான்மை சிங்கள மக்களைத் திருப்திப் படுத்தி விடலாம் என்பது பிரேமதாஸாவின் எண்ணம். இந்திய ராணுவம் வெளியேறி விட்டால் தமிழ்ப் பகுதிகளில் தான் முடிசூட்டிக் கொள்ளலாம் என்பது பிரபாகரனின் ஆசை. இருவர் நினைத்ததும் நிறைவேறிவிட்டது — உண்மைதான். ஆனால் இது தாற்காலிகமான ஓர் உண்மையே.

அடுத்த கட்டமாகத் தமிழ்ப் பகுதிகளை விடுதலைப் புலிகளின் ஆளுகைக்கு விட்டு விடச் சிங்களர்கள் ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். தம் பதவியைக் காப்பாற்றிக் கொள்ளப் பிரேமதாஸா, பிரபாகரனை ஓரம் கட்டியே தீர வேண்டும். என்னதான் இவர்கள் போராட்டம் நடத்தினாலும், பொங்கி எழுந்தாலும், தமிழர்களுக்கு, அரசியல் ரீதியாகவோ, பொருளாதார ரீதியாகவோ அதிககு தந்திரத்தை பிரேமதாஸா தரப் போவதில்லை. சிங்களப் பெரும்பான்மை அதற்கு இடம் தரச் சம்மதிக்காது. இந்தச் சூழ்நிலையில், தேர்தலில் நின்று ஜனநாயகப் பாதைக்கு வரவும் விடுதலைப் புலிகள் தயங்குகிறார்கள்.

இலங்கை அரசியல் சட்டப் பிரிவு, 'ஒருமைப்பாட்டைக்காப்பேன்' என்று தேர்தலில் நிற்கும் ஒவ்வொரு வேட்பாளரும் உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறது. ஆனால் விடுதலைப் புலிகளோ இந்தச் சட்டப்பிரிவை அரசியல் சட்டத்திலிருந்து எடுத்துவிட வற்புறுத்துகிறார்கள். இது நடக்கக் கூடிய காரியமா? அடுத்தபடியாக இ. பி. ஆர். எல். எஃப். உட்பட பல்வேறு தமிழ்ப் போராளிக் குழுக்களுடன் இலங்கை அரசு பேச்சு வார்த்தை நடத்தி வருவது விடுதலைப் புலிகளுக்கு ஆத்திரத்தை வரவழைத்து உள்ளது. இந்திய ராணுவத்தின் மீது சுமத்திய அதே பழியை இப்போது சிங்கள ராணுவத்தின் மீது போடுகிறார் பிரபாகரன். மற்ற போராளிக் குழுக்களுக்குச் சிங்கள ராணுவம் பயிற்சி கொடுக்கிறதாம்! மேலும், தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் காவலர்கள் செயல்பட விடுதலைப் புலிகள் அனுமதிப்பதில்லை. சிங்கள அரசுக்கு இது எரிச்சலை ஏற்படுத்தி இருக்கிறது.

''நாங்கள் எல்லாத் தமிழர்களுடனும் பேசுவோம்; எங்களை விடுதலைப் புலிகள் கட்டுப்படுத்த முடியாது'' என்று சிங்கள அரசு சொல்லியிருக்கிறது. மொத்தத்தில் மறுபடி ஒரு மோதல் நடக்க இருப்பது புரிகிறது. இதற்கான ஆயத்தங்களில் இரு தரப்பினருமே இறங்கி இருக்கிறார்கள்.

இந்தச் சூழ்நிலையில் போராளிக் குழுக்களோடு பேச்சுவார்த்தை நடத்திய முதல்வர் கருணாநிதியின் நிலை எப்படி இருக்கும்? விடுதலைப் புலிகளை ஆதரிக்காவிட்டால், தமிழர்களைக் கைவிட்டு விட்டதாக அவர் மீது பழி வரும். இந்திய அரசைப் பொறுத்தவரையில், நிச்சயம் விடுதலைப் புலிகளை ஆதரிக்க மாட்டார்கள். கருணாநிதி விடுதலைப்புலிகளை ஆதரிப்பதையும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இதனால் இங்கு மத்திய அரசு — மாநில அரசு மோதல் வரும்.

மீண்டும் விடுதலைப்புலிகள் — சிங்கள ராணுவம் மோதல், தமிழகத்திற்கு அகதிகள் வருகை, அதனால் இங்கே ஏற்படும் பிரச்னைகள்... ஆக ஒரு விஷவட்டம் கண்ணுக்குத் தெரிகிறது.

சந்திப்பு: ப்ரியன்.

* பிரேமதாஸா — பிரபாகரன்: மீண்டும் ஒரு மோதல்?



# வன்முறைக்கு வித்திடும் விளையாட்டுப் பொம்மைகள்!

குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொம்மைகள் பலவிதம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாய்க் குழந்தைகளின் வளர்ச்சியோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. சில அறிவு வளர்ச்சியைத் தூண்டுகின்றன; சில வன்முறைக்கும் வித்திடுகின்றன. இன்னும் சில பெற்றோரின் குடும்ப பட்ஜெட்டையே பாதிக்கின்றன. எல்லாக் கோணங்களையும் அலசுகிறது இக்கட்டுரை...





* பார்பி

'அம்மா... அம்மா... ப்ளீஸ்... என்று கொட்டை எழுத்துக்களுடன் ஒரு விளம்பரம் அண்மையில் பத்திரிகைகளில் வெளிவந்தது - அந்த விளம்பரம் தெரிவித்த செய்தி என்ன தெரியுமா? பெற்றோர்களே! உங்கள் குழந்தைகள், "அப்பா... அம்மா... ப்ளீஸ்" என்று வேண்டுகோள் விடுப்பார்கள். எதற்காக? நாங்கள் குழந்தைகளுக்காக அறிமுகப் படுத்தியுள்ள ஹோம் கம்ப்யூட்டரை வாங்கித்தரச் சொல்லித்தான்! அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, உங்கள் குழந்தைகள் விளையாட, ஒரு ஹோம் கம்ப்யூட்டர் வாங்கிக் கொடுத்து விடுங்கள். விலையொன்றும் அதிகமில்லை; ஐயாயிரம் ரூபாய் தான்! உங்கள் அன்புக் குழந்தைகளுக்காக இதைக் கூடச் செய்ய மாட்டீர்களா, என்ன?" என்று ஐஸ் கூட வைத்தது அந்த விளம்பரம்.

ஒரு குடும்பத் தலைவிவிடம் மேற்கண்ட விளம்பரத்தைக் காட்டியபோது, "உலகம் ரொம்பவும் முன்னேறி இருக்கிறது! நான் சிறுமியாய் இருந்த போது, எனக்கும், என் தங்கைக்கும் விளையாட்டுப் பொருள்கள் என எங்கள் வீட்டில் வாங்கிக் கொடுத்தது என்ன தெரியுமா? ஒரு செட் மரச் சொப்புகளும், மரப்பாச்சிப் பொம்மைகளும்தான்! இன்று என் பெண்ணோ ஒரு கூடை நிறைய விதம் விதமான விளையாட்டுச் சாமான்கள் வைத்துக் கொண்டிருக்கிறாள்! ஆனாலும் கம்ப்யூட்டர் போன்ற காஸ்ட்லி விஷயங்களுக்கு நாங்கள் பணத்துக்கு எங்கே போக? இந்த விளம்பரம் எங்கள் குழந்தைகள் கண்ணில் படாமல் ஒளித்து வைக்க வேண்டியது தான்!" என்றார்.

பத்திரிகை விளம்பரங்களை ஒளித்து வைத்து விடலாம். ஆனால் டெலிவிஷனில் வரும் குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொம்மை விளம்பரங்களை என்ன செய்வது? இவை புதுமையாகவும், மனம் கவரும் படியாகவும் அமைந்து பெரியவர்களையே கூட வாங்கத் தூண்டும்! டீ.வி. விளம்பரச்



* டாக்டர் விசுவநாதன்

* இத்தனை பெரிய பொம்மையை வைச்சுண்டு எப்படி விளையாடறது?

செலவையும் உள்ளடக்கியதுதான் பொம்மையின் விலை!

நாயுடு ஹாலின், பொம்மைகள் பிரிவில் பணியாற்றும் ராவ் கூறுகிறார்: "பெரும்பாலான குழந்தைகள் பெயர் குறிப்பிட்டு, 'இந்தப் பொம்மை இருக்கிறதா?' என்று கேட்கிறார்கள். விளையாட ஏதோ ஒரு பொம்மையைப் பெற்றோர் வாங்கிக் கொடுத்து, இக்காலக் குழந்தைகளைத் திருப்திப்படுத்த முடியாது. அவர்களின் புத்திசாலித்தனம் வயசுக்கு மீறியது: எனவே, பெற்றோர்கள் பலரும், 'உனக்கு எது வேண்டுமோ, அதை வாங்கிக்கொள்' என்று கூறிவிடுகிறார்கள்!"

"ஆனாலும் இந்தப் பொம்மைகள் எல்லாம் ரொம்ப விலை! துளி சைஸ் பொம்மைக் கார் நாற்பது ஐம்பது ரூபாய், கரடி பொம்மை நூற்றைம்பது ரூபாய். இந்தப் பொம்மைகள் அந்த அளவுக்கு மதிப்புப் பெறாதவை என்றே அடித்துச் சொல்லுவேன்," என்கிறார் குடும்பத் தலைவி நளினி. "அப்புறம் ஏன் வாங்குகிறீர்கள்?" என்று கேட்டால், "ஏதோ பையன் கேட்கிறான்; ஐம்பது ரூபாய் தானே! அவனது சந்தோஷம்தானே முக்கியம்" என்று பதில் சொல்லுகிறார் அவர்!

'லிட்டில் கிங்டம்' கடையில் குழந்தைகளுக்கான எல்லா சமாசாரங்களும் ஒரே கூரையின் கீழ் கிடைக்கின்றன. அதன் கிளை மேலாளர் அசோக், "பொம்மைகளுக்கு ஏப்ரல், மே, டிசம்பர், ஜனவரிதான் சீசன். இந்த மாதங்களில் லீவு வருவதே இத்தகைய அதிக விற்பனைக்கான அடிப்படைக் காரணம்," என்கிறார்.

பாட்டரியினால் இயங்கும் பொம்மைகளும், ரிமோட் கண்ட்ரோலில் இயங்கும் பொம்மைகளும் ஒரு காலத்தில் அயல்நாடுகளுக்குப் போய் வருகிறவர்கள் வாங்கி வரும் விஷயங்களாய் இருந்து வந்தன.. ஆனால் இன்று நிலைமை மாறி, அத்தகைய பொம்மைகள் இங்கேயே தயாரிக்கப்படுகின்றன. பொம்மைக் கடைக்குப் போய் விட்டால் பிரமிப்பு ஏற்படுகிறது. தானா-



* துப்பாக்கிப் பொம்மை வாங்கித் தரும் பெற்றோருக்குப் பொறுப்பு நிறைய உண்டு.

எல்லாமே வேண்டும் போல்தான் இருக்கு. எதை வாங்குவது?



கவே நடக்கிற, பாடுகிற, பேசுகிற பொம்மைகள் கூட வந்துள்ளன. பாட்டரி சக்தியால், பொம்மையின் உள்ளே டேப் ரெக்கார்டர், ஏற்கெனவே பதிவு செய்ததைப் பேசுகிறது; பாடுகிறது.

அடுத்ததாக அறிவூட்டும் பொம்மைகள். வயதுக்கேற்றவாறு இவை தயாரிக்கப்படுகின்றன. 'இந்தியாவை அறிந்து கொள்' என்று ஒரு விளையாட்டு. பெரிய இந்திய நாட்டு வரைபடம். பல்வேறு மாநிலங்கள், அந்த மாநிலங்களின் பிரதான வியாபாரப் பொருள்கள் என்று அதில் விவரங்கள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட தொகையை (டம்மி செக்குகள்) எடுத்துக் கொண்டு புறப்பட வேண்டும். இந்தியாவின் எல்லா மாநிலங்களுக்கும் பயணம் செய்ய வேண்டும். பயணத்தின் போதே ஒரு மாநிலத்தின் பிரதான பொருள்களை வாங்கிக் கொண்டு போய், அடுத்த மாநிலங்களில் லாபத்துக்கு விற்றுப் பணமும் சம்பாதிக்க வேண்டும். ஆட்டம் முடிவுறுகையில் யாரிடம் அதிகப் பணம் இருக்கிறதோ, அவரே ஜெயித்தவர். இளம் உள்ளங்களில் இந்த விளையாட்டு பூகோள அறிவைப் போதிப்பதோடு இல்லாமல், 'வியாபார நுணுக்கங்களையும் கற்றுக் கொள்ள வைக்கிறது.

எக்கச்சக்கமாக விற்பனையாகும் இன்னொரு விளையாட்டுப் பொருள் 'ஸ்காட்லாந்து யார்டு போலீஸ்.' 'தப்பியோடும் திருடனை, போலீஸ் துரத்திப் பிடிக்கிற விளையாட்டு. இதற்கு செஸ் ஆட்டம் போலக் கூர்மையான அறிவு தேவை. இது போல இன்னும் எத்தனையோ பல விளையாட்டுக்கள் குழந்தைகளின் மன இயல், அறிவுக்கூர்மை போன்ற அம்சங்களில் ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு, அவற்றின் அடிப்படையில் உருவாக்கப்படுகின்றன. தொழில் நுணுக்கத்தோடு தரமும் உயர்ந்து வருகிறது.

பொம்மைகள் விஷயத்தில், விளம்பரங்களின் பங்கு பற்றி விவரித்தார், 'மூன்றாவது கண்' விளம்பர ஏஜென்சியின் குமார்.

"பார்பி பொம்மைகள்தான் இன்று பெண் குழந்தைகளின் ஃபேவரிட். ஒரு பொம்மையின் விலை சுமார் எழுபது ரூபாய். ஒரு பொம்மையோடு விஷயம் முடியவில்லை. இந்த 'பார்பி' பெண்ணுக்குச் சுமார் நாற்பது விதமான உடைகள். ஒவ்வோர் உடையும் சுமார் இருபத்தைந்து ரூபாய். அதோடு விட்டதா? பார்பிக்கென்று பிரத்தியேகமான டைனிங் டேபிள் செட், கிச்சன் செட், அழகுசாதன செட், ஃபர்னிச்சர் செட், நீச்சல் குள செட் என்று வரிசையாய்ப் பல இணைப்புகள்! ஒவ்வொன்றும் பணத்துக்குத்தான்! தொடர்ச்சியான விளம்பரங்களின் விளைவாய், ஒரு பொம்மையை வாங்கிக் கொடுத்ததும், பெற்றோரை விடாமல் நச்சரித்து, அந்த வரிசையில் விற்பனையாகும் செட் முழுவதையும் வாங்கித்தரச் சொல்கிறார்கள் குழந்தைகள். போட்டி போட்டுக் கொண்டு இந்தப் பொம்மைகளைச் சேகரிக்கும் குழந்தைகள் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். பார்பி அடைந்த வெற்றியின் அடிப்படையில் இன்று வேறு பல "தொடர் கதை" பொம்மைகள் மார்க்கெட்டுக்கு வந்துள்ளன."

டி. வி. யில், ராமாயணம், மகாபாரத

ஒளிபரப்பு காரணமாய்ச் சிறுவர்களிடையே கதை, வில் — அம்பு போன்றவையும், மேற் கேயிருந்து இறக்குமதியான சிறுவர் தொடர்கள் காரணமாய் விதம் விதமான துப்பாக்கிகளும், சிறுவர், சிறுமியரிடையே பிரபலமாகியுள்ளன. ''இப்போது ஒளிபரப் பாகும் திப்பு சுல்தான், நீண்ட பொம்மைக் கத்திகளைப் பாப்புலராக்கும் சாத்திய முண்டு'' என்கிறார்கள்.

இதைப் பற்றிப் பேசும்போது, ''வன் முறையைத் தூண்டும், இதுபோன்ற ஆயுதங் களைக் குழந்தைகள் சிறு வயதிலிருந்தே பயன்படுத்தி விளையாடுவது ஆபத்தானது. இதனால் பிற்காலத்தில் அவர்கள் பெரிய குற்றவாளிகளாகும் சாத்தியமுண்டு என்று ஒட்டுமொத்தமாகக் குற்றஞ்சாட்ட முடி யாது. என்றாலும்கூட, மனோதத்துவரீதி யாய்க் கூறினால், அந்தக் குழந்தைகள் ஓர ளவு 'வயலண்டா'கவே இருப்பார்கள். மேலை நாடுகளில் துப்பாக்கி போன்ற ஆயுத பொம்மைகளின் பாக்கிங்மேலேயே 'எட்டு வயதுக்குட்பட்டவர்களுக்கு ஏற்ற தல்ல' என்று எச்சரிக்கை காணப்படும். இதை நாம் அலட்சியப்படுத்தலாகாது...'' என்கிறார் குழந்தைகள் சைக்காலஜியில் ஆய்வு செய்துள்ள புவனேஸ்வரி.

''தற்போதுள்ள நவீன விளையாட்டுச் சாதனங்கள், இன்றைய நவயுகக் குழந்தை களின் புத்திசாலித்தனத்தை — அதிகரிக்கப் பெரிதும் உதவுகின்றன. பொம்மைத் தயா ரிப்பில் ஒரு விஞ்ஞானபூர்வமான அணுகு முறை இப்போது வந்துள்ளது'' என்று கூறும், குழந்தைகள் ஸ்பெஷலிஸ்டான டாக்டர் ஜெ. விஸ்வநாதன், ''விளையாட்டுப் பொம்மை வாங்கித் தருவதுடன் பெற்றோ ரின் கடமை முடிந்து விடவில்லை'' என்றும் எச்சரிக்கிறார்.

உதாரணமாக, துப்பாக்கி பொம்மை வாங்கித் தருவதில் தவறில்லை. ஆனால் துப்பாக்கி எந்த சந்தர்ப்பங்களில் யார், யாரால் பயன்படுத்தப்படுகிறது, நன்மை தீமைகள் என்ன என்பதையெல்லாம் எடுத் துக் கூறி அதைப் புரிந்து கொள்ளக் கூடிய மனப்பக்குவம் வரும் வயதில்தான் வாங்கித் தர வேண்டும். அதே போல் முன்னர் குறிப் பிட்ட வியாபார விளையாட்டு வாங்கித் தந்தால் விளையாட்டில் எப்படி நேர்மை முக்கியமோ அப்படி வியாபாரத்திலும் நேர்மை வேண்டும் என்பது குழந்தைகளுக்கு உணர்த்தப்பட வேண்டும். குழந்தைகளுக் குப் புரியும்படியாக அவகாசம் எடுத்துக் கொண்டு பெற்றோர் அவர்களிடம் பேச வேண்டும்.

சிறு வயதிலிருந்தே பெற்றோர் தங்கள் பையனுக்கு விமானங்கள் மீது ஏற்படுத்திய ஈடுபாடு, பின்னர் அவன் பைலட்டாய் ஆக ஊக்கமளித்தது உண்டு. இதற்கு மறுபுறமாகக் குறி பார்த்து அடிப்பதில் சிறு வயது முதலே ஆர்வமாய் இருந்தவன் பிற்காலத்தில் சூதாட்ட கிளப்பிலேயே பழியாய்க் கிடந்த தும் உண்டு.

ஆக, ஒவ்வொரு பெற்றோரும் ஏராள விலை கொடுத்துத் தங்கள் ஆசைக் குழந்தை களுக்காக வாங்கும் பொம்மைகள், தங்கள் குழந்தைகளின் ஆரோக்கியமான அறிவு வளர்ச்சிக்கு உதவுகிறதா" என்று பார்த்துக் கொள்வது நல்லது. ஏதோ விளையாட்டுத் தானே என்று அலட்சியமாக இருப்பது ஆபத்தாக முடியவும் கூடும்.

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படமும், படங்களும்:
யோகா


அடுத்த இதழில்...

**தொழில் நிறுவனங்களில் தொழிலாளர் பங்கு...**

— சிறப்புக்கட்டுரை








# இந்தப் படத்துக்காகவா திரண்டு போனார்கள்!

என்.டி. ஆரின் படம் 'தானவீரசூர கர்ணா' ஒளிபரப்புவதற்கு முதல் நாள் காங்கிரஸார் ஊர்வலம் சென்று அதை ஒளிபரப்பக் கூடாது என்று கோஷமிட்டதாகச் செய்தி. சரிந்துள்ள ராமாராவின் செல்வாக்கைத் தூக்கி நிறுத்தும் நோக்கத்துடன் டீ.வி. தவறாகப் பயன்படுத்தப்படுகிறது என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு.

'மூன்றரை மணி நேரம் ஓடும் படத்தை உட்கார்ந்து பார்க்க முடியுமா?' என்கிற தயக்கம் இருந்த வேளையில், அப்படி அதில் என்னதான் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தை இந்தச் செய்தி தூண்டிவிட்டது.

கிலோ மீட்டர் கணக்கில் வசனங்கள். இடையிடையே அவை பாடல் உருவில் வேறு. அதுவும் இன்ன இடத்தில்தான் என்கிற நிர்ணயம் இல்லாமல் அம்புகள் பாய்ந்து கொண்டிருக்க, ஆட்கள் வீராவேசமாக மோதிக் கொண்டிருக்கும் சூடு பறக்கும் போர்க்களமும் இதற்கு விலக்கு அல்ல. கிராமியக் கூத்துக்களை நினைவு படுத்தும் இந்தப் படத்தைப் பற்றியா திரண்டு போய் அவர்கள் ஊர்வலம் போனார்கள்?

இரண்டு வாரங்களுக்கு முன், ஒரு நாள் செய்தி அறிக்கையில், பிரதமர் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிய நிகழ்ச்சியைக் காண்பித்தார்கள்.

''என் முகம் அடிக்கடி காண்பிக்கப் படுவதாக உங்களுக்குத் தோன்றினால் உடனே எனக்கு ஒரு போஸ்ட் கார்டு எழுதிப் போடுங்கள்'' என்று அப்போது அவர் கூறியதையும் காண்பித்தார்கள்!

கடந்த வாரம், பத்திரிகையாளர்களுக்குப் பேட்டியளித்த நிகழ்ச்சியின் போது, இது குறித்துச் செய்தித் துறை அமைச்சருக்குக் கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிவித்த பிரதமர், தம்மைப் படமெடுக்க முனைந்த டீவி. காமிராக்காரரைத் தடுத்து விட்டார் என்றும் செய்தி நிகழ்ச்சியில் கூறினார்கள். ஓவராக டீவியில் பிரதமர் காட்டப்படுவது அருவருப்பைத் தோற்றுவிக்குமென்றால் ஓவராக எதிர்ப்புத் தெரிவிப்பதும் கேலிக்குரியதாகிவிடும். நாசூக்காக அணுக வேண்டிய விஷயம்.

மனோரமாவின் மேற்பார்வை இயக்கத்தில் வெளிவந்து கொண்டிருக்கும் தொடர்: 'அன்புள்ள அம்மா'. வலுவான, குணசித்திர வேடம் அவருக்கு. கனம் முழுதுமே அவர் தோள்களில் என்றாலும், தமிழ் சினிமாத்தனம் தொடர் முழுதும் விரவியிருக்கிறது.

முழுக்க முழுக்க அதே ஃபார்முலாவைப் பின் பற்றி அமைக்கப் பட்டுள்ள நிகழ்ச்சிகள். அங்கங்கே வலுவில் புகுத்தப்பட்டுள்ள தத்துவ வசனங்கள். அடுத்து வரக்கூடிய நிகழ்ச்சிகளை முன்னதாகவே ஊகித்து விடக்கூடிய திரைக் கதையமைப்பு. எனவே எதிர் பார்ப்புக்கு வழியில்லாமல் போய்விடுகிறது.

இது என்றில்லை. பெரும்பாலான டீ.வி. தொடர்கள் 'தங்கள் வெற்றிக்குப் பெண்களின் கண்ணீரையே நம்பியிருப்பதைப் போலத் தெரிகிறது. சினிமாவைப் பீடித்திருந்த 'செண்டிமெண்ட் நோய்' தொலைக்காட்சிக்குள்ளும் ஊடுருவ, நாளுக்கு நாள் ஜுரம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

இரண்டாவது சானலில் ஒளி பரப்பாகும் ஞாநியின் தொடரில் (விண்ணிலிருந்து மண்ணுக்கு) சில துணிச்சலான வசனங்களை அனுமதித்திருந்தார்கள். பேட்டி காண வரும் ஒரு பத்திரிகையாளரிடம் அந்த மாஜி நடிகை (நடிப்பவர் வைஷ்ணவி) கூறுகிறார்:

''என்னைப் பத்திப் பத்திரிகைகளிலே வெளியானது எதுவும் நான் சொன்னது இல்லைங்க. அவங்களா எதையாவது எழுதிக்குவாங்க. என் பேரைப் போட்டுருவாங்க. அப்புறம் என்கிட்டே சொல்லிடுவாங்க...''

இதற்கு அந்தப் பத்திரிகையாளர் சொன்ன பதில்: ''சிலபேர் காசு வாங்கிட்டு எழுதறாங்க. சிலபேர் தண்ணி வாங்கிட்டு எழுதறாங்க. நான் உங்ககிட்டே பேசிட்டு எழுத விரும்பறேன்...''

**No Comments.**

பெண்கள் எதிர் நோக்க வேண்டியுள்ள பிரச்னைகளை வாரம் ஒன்றாக அலசிக் கொண்டிருக்கிறது 'பெண்' தொடர். 'அப்பா இருக்கேன்' கதையில் அப்பாவாக நடித்த சந்திரஹாசன் அச்சா. வயதான கமலஹாசனைப் பார்த்ததைப் போலிருக்கிறது. 'விஷுவல் மீடியம்' என்றால் என்ன என்பதைத் தான் புரிந்து கொண்டுள்ளதை ஒவ்வொரு வாரமும் வலியுறுத்தி வருகிறார் சுகாசினி. மன்னிக்கவும், சுஹாசினி. (அவரே வெளியிட்டுள்ள திருத்தத்தின் படி).

**— பிச்சாமி.**

# புத்தக வெளியீட்டில் புதிய சாதனை!

வர்த்தமானன் பதிப்பகம் இனி இப்புதிய முகவரியில் இயங்கும். இதன் பொருட்டு இரு சலுகைகள் தருகிறோம்! கந்தபுராணத்திற்கும், கம்பராமாயணத்திற்கும், வில்லிபாரதத்திற்கும் 30% தள்ளுபடி; மற்றவற்றிற்கு 20% தள்ளுபடி. இந்தச் சலுகைகள் சில நாட்களுக்கே உண்டு. இப்படி வாங்கினால் பதிவுத்தபால் செலவையும் நாங்களே ஏற்கிறோம். ரூ 120-க்குக் கீழ் வாங்குவோர் நூல்களின் சலுகை விலையை M.O. செய்க. புத்தகங்களை V.P.P. யில் அனுப்புகிறோம். V.P.P. செலவைத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக. முன்பணம் அனுப்புவோர்க்கு மட்டுமே நூல்கள் அனுப்பப்படும்.

பல்லாயிரக்கணக்கான பாடல்களைக் கொண்ட கந்தபுராணமும், கம்பராமாயணமும், வில்லி பாரதமும் எங்களது ஒப்பற்ற சாதனை வெளியீடுகள்! இந்த அளவுக்கு மிகப்பெரிய நூல்களை வேறு எந்தத் தமிழ்ப் பதிப்பகமும் இதுவரை வெளியிட்டதில்லை!

இடப்பக்கம் பாட்டு முடியும்போது வலப்பக்கம் அதன் உரை முடியும்! ஒரு நாவல் படிப்பது போல வலப்பக்க உரையைப் படித்துக் கொண்டே போகலாம்! ஒரே மாதத்தில் பின்வரும் அரிய நூல்கள் அனைத்தையும் படித்து முடிக்கலாம். நூல் விலை விவரம் கீழே:

★ **கந்தபுராணம்** (ஒருபக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
10 தொகுதிகள் விலை ரூ 460.00 சலுகை விலை ரூ 322.00

★ **கம்பராமாயணம்** (ஒருபக்கம் மூலம்-எதிர்ப்பக்கம் உரை)
9 தொகுதிகள் விலை ரூ 450. சலுகை விலை ரூ 315.00

★ **வில்லிபாரதம்** (ஒருபக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
6 தொகுதிகள் விலை ரூ 230. சலுகை விலை ரூ 161.00

★ **சீவக சிந்தாமணி** (ஒருபக்கம் மூலம்-எதிர்ப்பக்கம் உரை)
5 தொகுதிகள் விலை ரூ 122. சலுகை விலை ரூ 97.00

★ **சிலப்பதிகாரம்** (ஒருபக்கம் மூலம்-எதிர்ப்பக்கம் உரை)
3 தொகுதிகள் விலை ரூ 42. சலுகை விலை ரூ 34.00

★ **உத்தரகாண்டம்** (ஒருபக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
2 தொகுதிகள் விலை ரூ 80. சலுகை விலை ரூ 64.00

★ **திருக்குறள்** (ஒருபக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
விலை ரூ 25. சலுகை விலை ரூ 20.00

★ **நாலடியார்** (ஒருபக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
விலை ரூ 22. சலுகை விலை ரூ 17.00

★ **தண்டியலங்காரம்** (மூலமும் உரையும்)
விலை ரூ 30. சலுகை விலை ரூ 24.00

★ **திருவாய்மொழி** (மூலமும் உரையும்)
முதல் பாகம் விலை ரூ 30. சலுகை விலை ரூ 24.00

**சலுகை விலையைப் பின்வரும் புதிய முகவரிக்கு M.O. (அ) D.D. அனுப்புக. உடனே நூல்களை அனுப்புகிறோம்.**

## VARTHAMANAN PATHIPPAGAM

ARR Complex, 141, Usman Road, T. Nagar, Madras - 17.

---

பிற பதிப்பாளர்களின் மிகச் சிறந்த நூல்களும் கிடைக்கும் இலவச விலைப்பட்டியலுக்கு எழுதுக.

---

ADSERVE




# கல்கி

1990 ஜூன் 10
மலர் : 48 இதழ் 45
பிரமோதூத வைகாசி 27




## ஸாது அல்ல, ஸாக்ஸேனா!

காஷ்மீரப் பிரச்னை உயிர்களைப் பலி வாங்குவது போதாதென்று உயர் பதவிகளிலிருந்து பலரை உருள வைத்துக் கொண்டிருக்கிறது. ஜக்மோகனின் பதவி பறி போயிற்று. அடுத்து, காஷ்மீர் விவகாரத்தை இனி ஃபெர்னாண்டஸ் கவனிக்கத் தேவையில்லை என்று அவரிடமிருந்து அந்தப் பொறுப்பு பறிக்கப்பட்டது. இப்போது ஃபெர்னாண்டஸ் தாம் அமைச்சரவையிலிருந்தே ராஜினாமா செய்து விடுவதாக அச்சுறுத்திக் கொண்டிருக்கிறார். ஆக மொத்தம், காஷ்மீர அரசியலை, டில்லி அமைச்சரவை அரசியலும் தோழமைக்கட்சிகளின் அரசியலும் சேர்ந்து குட்டை குழப்பிக் கொண்டிருக்கின்றன.

எல்லாரையும் அணைத்துக் கொண்டு போக வேண்டும், திருப்திப்படுத்த வேண்டும் என்ற பிரதமரின் நோக்கம் தவறானது அல்ல. ஆனால் அதற்கு ஓர் எல்லை உண்டு. பலரும் கூறுவதைப் பொறுமையாகக் கேட்டுக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் முடிவுகளை எடுக்க வேண்டியவர் பிரதமர் ஒருவராக மட்டுமே இருக்க வேண்டும். அவர் முடிவுப்படி உள்துறை அமைச்சகமும் வெளி உறவுத்துறை அமைச்சகமும் இயங்க வேண்டும். தப்போ சரியோ, யோசித்து எடுத்த முடிவில் பிரதமர் உறுதியாக இருக்க வேண்டும். நேற்று ஒரு முடிவு; இன்று மாற்று முடிவு; நாளை வேறு ஒரு முடிவு என்றால் உலகம் சிரிக்கும். பிரச்னையும் தீராமல் வளரும்; தலைவலி தொடரும்.

Too many cooks spoil the broth என்பார்கள். அதுதான் நடந்தது. 'ஜக்மோகன்தான் காஷ்மீரத்தைக் 'கட்டுக்குள் வைப்பார், உறுதியானவர்' என்று யாரோ கூற அவரை நியமித்தார் பிரதமர். பி. ஜே. பிக்குத் திருப்தி. ஆனால் காஷ்மீர மக்கள் ஊரடங்குச் சட்ட ஆட்சியிலும் போலீஸ் அடக்குமுறை ராஜ்யத்திலும் சொல்லொணாத் துன்பத்துக்கு ஆளானார்கள். இன்னொரு புறம் உள்துறை அமைச்சகத்துக்குப் போட்டியாக காஷ்மீர விவகார அமைச்சர் என்று ஃபெர்னாண்டஸ் ஒருவர் எதற்கு? இவர், 'தீவிரவாதிகளுடனும் பேச்சு வார்த்தை நடத்தி வழிக்குக் கொண்டு வருகிறேன்' என்று ஆரம்பித்துப் பூஜ்யம்தான் கண்டார்.

மௌல்வி ஃபரூக் இறுதி ஊர்வலத்தின் போது நடந்த துப்பாக்கிச் சூடும், அதன் விளைவான மரணங்களும் ஜக்மோகன் ராஜினாமாவை உறுதி செய்தன. போதாக்குறைக்கு அவர் பம்பாய் பத்திரிகைக்கு அளித்த அசம்பாவிதப் பேட்டி வேறு சேர்ந்து கொண்டு அவரை காஷ்மீர் ஆளுனர் மாளிகையிலிருந்து கிளப்பி, ராஜ்யசபையில் கொண்டு வந்து தள்ளியிருக்கிறது.

இப்போது ஸாக்ஸேனா ஆளுனராகப் போயிருக்கிறார். இவர் சந்திக்க வேண்டிய பிரச்னை இலகுவானதல்ல எனில், இவரும் சாது அல்ல. மாஜி போலீஸ் உயர் அதிகாரிதான். RAW எனப்படும் உளவுத்துறை தலைவராக இருந்தவர்தான். இவர் எதிர் கொள்ளப் போகிற தீவிரவாதிகள், ஜக்மோகனை ஜகா வாங்கச் செய்து விட்ட வெற்றிக்களிப்பில் மிதக்கிறார்கள். ஓர் ஆளுனரை வீட்டுக்கு அனுப்பச் சுலபமான வழி, போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் நடக்குமாறு ஒரு சந்தர்ப்பத்தை உருவாக்கி விடுவதுதான் என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சந்தோஷம் என்றால் என்ன என்பதை மறந்தே போனவர்கள் இருபக்கத்திலும் இடி வாங்கிக் கொண்டிருக்கும் காஷ்மீர மக்கள் மட்டுமே.

போனது போகட்டும், இனிமேலாவது பஞ்சாப், காஷ்மீர் விவகாரங்களில் நமது கொள்கைகள் என்ன; அணுகுமுறைகள் என்ன என்பதைப் பிரதமர் தமக்கு நம்பிக்கையான அறிஞர்களைக் கலந்து ஆலோசித்துத் திட்டவட்டமான முடிவுக்கு வரட்டும். பிறகு அந்த முடிவுகளை உள்துறை அமைச்சகம், வெளி உறவுத் துறை அமைச்சகம் மூலம் உறுதியாக அமுல்படுத்தட்டும்.

பி. ஜே. பி யைத் திருப்திப்படுத்த இந்தக் காரியம்; ராஜீவை வசப்படுத்த அது. ஜனதாதள அமைச்சர்கள் விருப்பத்துக்காக இன்னது என்று பலரகப்பட்ட காரியங்களைச் செய்து வந்தால், அந்தத் தடுமாற்றம், வீடு பற்றி எரியும் போது சுருட்டுக்கு நெருப்பு கேட்கும் கதையாக முடியும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

**மத்யமர்: 'அறிவுரை' வாசகர் விமர்சனம்!**

## அதிர்ச்சி வைத்தியம்

கதைக்குத் தலைப்பு 'அறிவுரை' என்பதை விட, 'அதிர்ச்சி வைத்தியம்' என்பது பொருந்தும். ராமலிங்கத்தின் அப்பா அவனை அருகில் அழைத்து, ''லஞ்சம் வருதுன்னா வாங்கிடு'' என்று சொல்லும் அக்கணத்தில் இருவரின் முகமும் எப்படி இருந்திருக்கும் என்பதை நேரில் பார்த்த உணர்வு ஏற்பட்டது. ஒவ்வொரு மனிதனுக்கும் கஷ்டம் வரும்போது ஏற்படும் மன உளைச்சல்களை 'மீனாட்சி' கேரக்டர் மூலம் 'ஜெராக்ஸ்' காப்பி எடுத்திருக்கிறார்! ஆனால் கதையின் கரு 'நெகடிவ் அப்ரோச்' ஆக இருப்பது தான் மிகப் பெரிய குறை!

— கிருட்டிண எழில், நாகப்பட்டினம்.

## பிழைக்கத் தெரியாதவர்கள்

நானும் ராமலிங்கத்தின் தந்தை மாதிரி தான். வாங்குவதற்கு வசதி இருந்தும், வாங்காமலேயே 'மனச்சாட்சிக்குப் பயந்து வேலை செய்யும் 'ராமலிங்கத்தின் தந்தையைப் போன்றவர்கள்' எவ்வளவோ பேர் உள்ளனர். அவ்வளவு பேரும் இக்கால நோக்கில் 'பிழைக்கத் தெரியாதவர்கள்.'

— ஜி. ஸ்ரீனிவாசன், சென்னை — 91.

## முடிவு நமது ஊகத்துக்கு...

ராமலிங்கத்தின் மனத்தில் லஞ்சம் வாங்கலாமா, வேண்டாமா என்று ஓர் ஊசலை ஏற்படுத்தி, ராமலிங்கம் லஞ்சம் 'வாங்குவாரா? மாட்டாரா?' என்ற கேள்வியை நமக்குள் விதைத்து ஒரு மாயமானைத் துரத்திச் செல்லும் சுஜாதா... சொல்ல வருகின்ற விஷயம் லஞ்சம் பற்றியல்ல. முதுமையின் வறுமையில் பெற்றோரைச் சரியாகக் கவனித்துக் கொள்ளாத பிள்ளைகளைப் பற்றித் தான்! கதையின் முடிவில் ராமலிங்கத்தின் தந்தை குரலில் சுஜாதா நமக்கு 'அறிவுரை' சொல்கிறார்! வழக்கம் போல சுஜாதா பிரச்னைக்கு முடிவு சொல்லாமல் நமது ஊகத்திற்கு விட்டுவிடுகிறார். இருந்தாலும் ராமலிங்கம் நிச்சயம் லஞ்சம் வாங்க மாட்டாரென்றும், இனி தம் தந்தையை நன்கு கவனித்துக் கொள்வாரென்றும் (அவரது பிள்ளை அவரை நன்கு பார்த்துக் கொள்ள வேண்டுமே!) நம்மால் ஊகிக்க முடிகிறது.

— ஆ. மோகன் குமார், நீடாமங்கலம்.

## பழுதான பாராசூட்!

லஞ்சம் வாங்குவதை இலை மறை, காய் மறையாகக் கூடச் சொல்லாமல், நேரிடையாகச் சொல்லியிருப்பதை ஜீரணிக்க முடியவில்லை. அதற்கு அறிவுரை என்று தலைப்பிட்டு, வரும் தலைமுறையினரின் அத்தியாவசியத் தேவையாக லஞ்சத்தை நியாயப்படுத்திச் சொல்லியிருப்பது, பாராசூட் பழுதாகிவிட்ட அதிர்ச்சியைத் தருகிறது.

— பொன். ராஜேந்திரன்,
முருங்கப்பேட்டை.

## புதைசேற்றில் தள்ளி...

'அறிவுரை' சிறுகதையின் நடை, நடந்து கொண்டிருந்தவனை புல்லட்டில் வந்து லிப்ட் கொடுத்து, 'ஜிவ்'வென்று சீறிப் பாய்ந்து கண்களில் நீர்வர காட்சிகளை அசுர வேகத்தில் காட்டி, திடீர்த் திருப்பமொன்றில் — அருகிலுள்ள புதைசேற்றில் தலைகுப்புறத் தள்ளிவிட்டு, பொசுக்கென்று மறைந்துவிட்டது போல உணர்ந்தேன். மனச்சாட்சியை அடகு வைத்துவிட்டு லஞ்சம் தாராளமாக வாங்கு — என்று, மீள முடியாத புதைசேற்றில் விழச் சொல்கிறார். — குற்றம் செய்தவனை விடக் குற்றம் செய்யத் தூண்டியவன், கடும் தண்டனைக்கு உள்ளாக வேண்டும். மனைவிக்குச் சிகிச்சையளிக்க முடியாமல், ஒழுகும் வீட்டில், எல்லோரும் உதாசீனப்படுத்தி விட்டார்களே என்று குமைந்து கொண்டு கிடக்கட்டும் — ப்ளீஸ் ராமலிங்கம், வேறு நியாயமான வழிகள் இருக்கு. யோசித்துப் பார். லஞ்சம் வாங்கிவிடாதே!'

— எஸ். குருசாமி, கோவை — 27.

## சோகச் சுமை

கடைசியாக ராமலிங்கத்தின் தந்தை கூறும் 'அறிவுரை'யிலிருந்து, ''தன்னுடைய மகன்களால் வயதான காலத்தில் புறக்கணிக்கப்பட்டுவிட்டதில் அவருக்கு ஏற்பட்ட 'விரக்தி,' தாம் ஒரு நேர்மையாளனாய் வாழ்ந்ததில் அவருக்குக் கிடைத்த 'திருப்தி'யைக் கூட அழுக்கிவிட்டதை உணர்கையில் நம் மனம் கனத்துப் போகிறது. மிக எளிய வார்த்தை

# பிழைக்கத் தெரியாதவர்கள்!

களாலேயே, வாசிப்பவர் நெஞ்சில் சோகச் சுமையை இறக்கிவிடுகிற சுஜாதாவின் திறமை யாருக்கு வரும்?

— வி. ராதா, சிதம்பரம் — 1.

### ஆதங்கத்தின் பிரதிபலிப்பு!

லஞ்சம் வாங்காமல் நேர்மையாக வாழ்ந்து சத்திய சோதனையில் வெற்றி பெற்ற ராமலிங்கத்தின் தந்தை கடைசியாகக் கூறுகிறார்: ''லஞ்சம் வாங்கு!'' என்று. ஆத்மார்த்தமாக அல்ல, வெறுப்பு! விரக்தி! இந்தச் சமூகத்தின் மீது கோபம், துவேஷம். லஞ்சம் வாங்காமல் இருந்து வறுமையைச் சந்தித்தது தவிர வேறு என்ன சாதித்தேன் என்ற ஏக்கம். மனம் நொந்து ராமலிங்கத்தின் தந்தை கூறும் வார்த்தைகள். பல்லாயிரக்கணக்கான நேர்மையாளர்களின் ஆதங்கத்தின் பிரதிபலிப்பு. ஓர் இயக்கம் உருவாக வேண்டும். அதில் பல ராமலிங்கங்கள் வேண்டும். சமுதாயம் மாறும்! மாற்றுவோம்!! என்ற உறுதி வேண்டும். எதிர்காலத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும்! எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

— அ. ராஜசிம்மன், ராசிபுரம்.

### சுழன்றடிக்கும் சூறாவளி!

வழிகாட்டிகளே தப்பான அறிவுரை கூறும் போதுதான் சுழன்றடிக்கும் சூறாவளியின் உத்வேகம் புரிகிறது. நாறிப் போன சமுதாயம் மட்டுமல்ல. சத்தியத்துக்காகப் போராடுபவர்களின் மனந்தளர்ந்த நிலையும் தெரிகிறது. அவர்களின் கரங்களைப் பலப்படுத்த ஏதாவது செய்ய வேண்டும். என்றும் தோன்றுகிறது. சபாஷ் சுஜாதா! இறைவா! நாங்கள் நேர்மையாக வாழ எங்களுக்குச் சக்தி அளிப்பாயாக' என்று பிரார்த்திப்போம்.

— எஸ். முகமது இப்ராஹிம், கோவில்பட்டி.

### இடறுகிறது!

சுஜாதாவின் ''அறிவுரை'' என்ற கதையில் இராமலிங்கம், தன் லஞ்சம் வாங்காத அப்பாவின் கௌரவத்தை உருக்குலையவிட விரும்பாமல் தானும் லஞ்சம் வாங்காமல் கடன்களிடையே அல்லாடுவது தெள்ளத் தெளிவாக அவரால்சித்திரிக்கப்பட்டுவிட்டு, ஆனால் பின்னர் அந்த மன உறுதி வாய்ந்த தகப்பனாரே தம் மகனை லஞ்சம் வாங்கச் சொல்லிக் கூறும்போது இடறுகிறது. பணத் தேவைக்காக லஞ்சம் வாங்குவதை நியாயப்படுத்த முயலும் கதைக் கருவானது சரியானதல்ல. இது மத்யமர் இனத்தினரின் பலவீனத்தையே உணர்த்துகின்றது.

— க. லெட்சுமி, தேவகோட்டை.

**ரூ 50 சிறப்புப் பரிசு பெறுபவர்.**

**ஆ. ராஜசிம்மன்**
**மானேஜர், கனரா வங்கி**
**ராசிபுரம் 637 408**

**மற்ற விமர்சனங்கள் ரூ 25 சன்மானம் பெறுகின்றன.**

### இரு கருத்துக்களைப் பின்னி...

மேலோட்டமாகப் படிக்கும் போது 'லஞ்சம் வாங்கலாம்' என்பது போல் முடித்திருக்கிறாரே' என்று தோன்றும். நோயாளி, மனைவியுடன், ஒழுகும் வீட்டில் வாழ்ந்து வரும் பெரியவர், தம் பிள்ளைகள் தம்மைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லையே என்ற



ஆதங்கத்தில்...சலிப்பில்...விரக்தியில் கூறும் அறிவுரைதான், ''லஞ்சம் வாங்காம நான் என்னத்தைக் கண்டேன்? உன் பிள்ளைகள் உன்னை ஆதரிக்க வேண்டுமானால் தாராளமாக லஞ்சம் வாங்கியாவது சொத்து சேர்த்து வை,'' என்பது. லஞ்சம் வாங்கிப் பணம் சேர்த்திருந்தால் என்னை உதாசீனப்படுத்தியிருக்க மாட்டாய்'' என்று அவர் கூறியது மகனைச் சிந்திக்க வைக்கும். தாம் பெற்றவர்களைப் பராமரிக்கத் தவறியதை உணர்வான். இதைத்தான் சுஜாதா நமக்கு உணர்த்துகிறார்.

பெற்றவர்களைப்பேண வேண்டும், எந்தக் காரணம் கொண்டும் லஞ்சப் பேயின் கையில் சிக்கக் கூடாது என்ற இரண்டு கருத்துக்களைப் பின்னி எழுதியிருக்கும் சுஜாதாவின் உத்தி அருமை.

— ஜி. ஆறுமுகசாமி, சிறுமுகை.

# விடுதலைப் புலிகளுக்கு முதல்வர் விடுத்துள்ள எச்சரிக்கை பற்றி.....



* எச்சரிக்கை விடுத்தார்.



* பெரிதாக வென்றார்.



* தேர்ந்தெடுக்கப்பட்டார்.

* ராஜேந்தர் பிரியன், திருச்சி — 3.

? நாடாளுமன்றத்தில் காங்கிரஸ்காரர்கள் நடத்தையைக் கண்டு சர்மா கண்ணீர் வடித்திருக்கிறாரே?

! அதன் பின்னர் திவாரி, சர்மாவை உதாசீனமாகப் பேசியதற்காக ஜனநாயகப் பற்றுள்ள ஒவ்வொருவருமே கண்ணீர் வடிக்க வேண்டும்.

* அப்துல் சலாம், திருச்சி.

? ''சாத்தானின் ராணுவம்'' என்ற தலைப்பில் விடுதலைப் புலிகள் ஒரு புத்தகம் வெளியிட உள்ளனராமே?

! கொரில்லாப் போர் முறையில் பிரசாரமும் ஓர் ஆயுதம். அதைப் பயன்படுத்தவும் புலிகள் நன்கு அறிந்தவர்கள். கலைஞரைப் புத்தகத்துக்கு முன்னுரை எழுதச் சொல்லாமலிருந்தால் சரி.

* எஸ். அருள்மொழி, காட்டூர்.

? மக்களைக் கவர்வதற்காக சாயிபாபா புரியும் சித்து வித்தைகளை வரவேற்கிறீர்களா?

! ''உனக்குப் புரியாத, தெரியாத விஷயத்தைப் பற்றி நீ ஒரு தீர்ப்பு வழங்க அவசியமில்லை'' என்ற அவர் கருத்தை மதிக்கிறேன். மேலும், ''இந்தச் சித்து விளையாட்டுக்கள் முக்கியமல்ல; என்னிடமிருந்து பெருகும் அன்பை நீ உணர்கிறாயா என்பது தான் முக்கியம்'' என்ற அவர் சொல்லை ஏற்கிறேன். அவர் மக்கள் குலம் முழுவதற்கும் விடுக்கும் செய்தி, ''அன்பு'' என்ற ஒரே சொல்லில் அடங்கி விடுகிறது.

* கே. ஏ. காளிமுத்து, காரை.

? 'ராஜாஜி முதல்வராக இருந்த போது கல்லக்குடி போராட்டத்தில் 'எனக்கு ஆறு மாதம் சிறைத் தண்டனை விதிக்கும்படி நீதிபதிக்கு டெலிஃபோன் மூலம் உத்தரவிட்டார்' என்று முதல்வர் கருணாநிதி குங்குமத்தில் எழுதியிருக்கிறாரே?

! தம்மை 'ஹீரோ' என்று காட்டிக்கொள்ளும் ஆசையில் ராஜாஜியை 'வில்லன்'ஆக்க முயன்று, அதற்கு அநாமதேயத்தைச் சாட்சிக்கு அழைத்திருக்கிறாரே, அதைத்தானே சொல்கிறீர்கள்? மலிவு விலைச் சாராயத்தால் பாதிக்கப்படவிருக்கும் லட்சோப லட்சம் தாய்மார்களைக் கேட்டுப் பாருங்கள், சொல்வார்கள், யார் வில்லன், யார் ஹீரோ என்று.

* டி. சந்திரன், ஈரோடு.

? குகன் ராஜினாமா செய்து விட்டாரே? பின்னணி ஏதும் இருக்குமா?

! 'பின்னணி ஏதும் இல்லை என்று கூறி விட்ட பிறகும் பின்னணியைக் கற்பனை பண்ணி எழுதி வெளியிடுகிறீர்களே,' என்று எக்ஸ்பிரஸ் ஏட்டுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார் குகன்.

* ப. சுகுமார் ராஜ், தூத்துக்குடி.

? விடுதலைப் புலிகளுக்குத் தமிழக முதல்வர் விடுத்திருக்கும் எச்சரிக்கை பற்றி?

! தங்களுக்கு வீரவணக்கம் செலுத்திய அதே வாயால் பேசப்பட்ட இந்த எச்சரிக்கையை விடுதலைப் புலிகள் பெரிதாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். நாளைக்கு நடக்கக் கூடாதது ஏதும் நடந்தால், கருணாநிதி மீது யாரும் குறை கூற மாட்டார்கள். 'தெரிந்த கதைதானே' என்பார்கள்; அதனால், மத்திய அரசுதான் விழிப்புடன் இருக்க வேண்டும். எதிர்க்கட்சிகள் தான்

இதை எடுத்துச் சொல்ல வேண்டும்.

* வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை — 17.

? மதுவிலக்குப் போலீஸார் நாலாயிரம் பேர் கடந்த ஒரு மாத காலமாக வேலையில்லாமல் தவிக்கிறார்களாமே?

! பாக்கெட் சாராய உற்பத்தி, விநியோகத் துறையில் வேலை கொடுத்தால் ஆயிற்று!

* மு. வேங்கடேஸ்குமார், திருச்சி — 20.

? சௌதாலாவுக்கு முடிவுதான் என்ன?

! சௌதாலாவின் ராஜினாமாவை அடுத்து ஒரு பேட்டியில், 'தர்பா கலானுக்கு நானோ, என் மகனோ போக மாட்டோம். ஆனாலும், தர்பா கலானில் சௌதாலா வெற்றி பெறுவான்' என்றார் தேவிலால். அப்படியே நடந்திருக்கிறது! இதிலிருந்து என்ன தெரிகிறது? மக்களிடம் அபரிமிதமான செல்வாக்குப் பெற்றுள்ள எல்லோருமே சிறந்த ஆட்சியாளர்களாகவும் இருக்க வேண்டிய அவசியமில்லை என்ற பாடம் தான் மீண்டும் ஒருமுறை படிக்கப்படுகிறது. எனவே, ஜனநாயகத்தில் சட்டம், விதிமுறைகள் அளவுக்குத் தார்மிக மரபுகளும் முக்கியமானவை என்பது மறுபடியும் வலியுறுத்தப்படுகிறது.

* என். சுரேஷ், சேலம். *

? வி.பி.சிங் ஆட்சி குறைந்தபட்சம் பத்து ஆண்டுகளாவது நீடிக்கும் என்று தேவிலால் பேசியுள்ளது பற்றி...?

! தமது மகனின் ராஜினாமாவைக் கோரியதன் மூலம் தேசிய முன்னணி அமைச்சரவை, சௌதாலாவுக்கு மாபெரும் அநீதி இழைத்து விட்டதாகக் கருதுகிறார் தேவிலால். வி.பி. சிங், ஹெக்டே மீதெல்லாம் அவருக்கு ஏகப்பட்ட அதிருப்தி — மறைக்காமல் வெளியிடுகிறார். ஆனபோதிலும் 'தேசிய முன்னணி அரசு கவிழாது' என்று உறுதி அளிக்கிறார். காரணம், 'இந்த அரசை ஆட்சியில் அமர்த்த என் பங்கு மிகப் பெரியது; இதனை நான் கவிழ்த்தால் மக்கள் என்னை மன்னிக்கவே மாட்டார்கள்'' என்கிறார்.



* மறைக்காமல் பேசினார்.



* கண்ணீர் வடித்தார்.

* கே. அருணாசலம், தென்காசி.

? இந்து ஆலயங்களில் முக்கிய பிரமுகர்களுக்குப் பூர்ண கும்ப மரியாதை வழங்குவதைத் தடுக்க அரசு தடை செய்துள்ளது பற்றி...?

! ஜனநாயகத்தில் எவ்வாறு மரபுகள் முக்கியமோ அப்படியேதான் கோயில்கள் விஷயத்திலும். இஷ்டத்துக்கு எல்லாவற்றையும் மாற்றுவது, ஆஸ்திக உள்ளங்களைப் புண்படுத்தும். பூர்ணகும்ப மரியாதையும், பரிவட்டமும் பிரமுகர்களுக்கு அளிக்கப்படும் பெரிய கௌரவம் அல்ல. அடக்கத்தை அவர்களுக்கு உணர்த்தும் சாதனங்கள், பொறுப்பையும், பயபக்தியையும் அதிகரிக்கச் செய்யும் வழிமுறைகள். இவற்றுக்குத் தடை விதிப்பதைவிட, 'ஜனநாயக அரசின் பார்வையில் அனைவரும் சமம். எனவே அரசு சார்பில் இனி விருதுகள், பட்டங்கள் யாருக்கும் கிடையாது' என்று முடிவு செய்யலாமே? செய்வார்களா?

* எஸ். யோகலிங்கம், சென்னை.

? ஜனதா தளத் தலைவராகப் பொம்மை தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து?

! தற்காலிகத் தலைமை என்பதால் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து 'ஏகமனதாக'த் தேர்ந்தெடுக்கப்படுவதைப் போனால் போகிறது என்று ஏற்கலாம். இதுபோன்ற நாடகங்கள் தொடர்கதையாகாமல் சீக்கிரமே கட்சியின் தேர்தல்கள் பல மட்டங்களிலும் நடந்து, ஆரோக்கியமான உட்கட்சி ஜனநாயகம் உருவாவதுதான் நல்லது.

* ரகுபதி, சென்னை.

? ஹரியானா இடைத்தேர்தல் முடிவுகள் பற்றி...?

! தர்பா கலானில் அபரிமித மெஜாரிட்டி பெற்றுச் சௌதாலா வெற்றி பெற்றதுதான் அதிகமாகக் கவனத்தைக் கவரும். இது இயற்கையே. ஆனால் அங்கு மட்டுமின்றி அம்பாலா கண்டோன்மெண்ட் தொகுதியிலும் இ. காங்கிரஸ் தோற்றுப் போனது கவனிக்கத்தக்கது. பின்னதில் பி.ஜே.பி. வேட்பாளர் அனில்குமார் வென்றிருக்கிறார். தலைமை என்று மாறுகிறதோ அன்றுதான் இ. காங்கிரஸுக்கு விமோசனம். நேரு குடும்பம் என்ற மாயா மோகத்திலிருந்து காங்கிரஸ்காரர்கள் எப்போது விடுபடுகிறார்களோ, அன்றுதான் நாட்டுக்கும் நல்ல நாள்.

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**என். சுரேஷ்,
1/14—B, சுந்தர் நகர்,
அய்யம்பெருமாள்பட்டி அஞ்சல்,
சேலம் — 636 005.**

# காஸ் விபத்துக்களும் கிடைக்காத நஷ்ட ஈடும்



பாதுகாப்பான சிலிண்டர்களில்தான் நிரப்பப்படுகிறதா?

அது ஒரு வெள்ளிக்கிழமை. மாலை ஆறு மணி இருக்கலாம்.

காஸ் தீர்ந்துவிட்டது என்று, இரண்டாம் சிலிண்டரை இணைக்க, அதன் வெள்ளை பிளாஸ்டிக் மூடியை அகற்றினார் லட்சுமி.

கட்டைவிரல் பருமனுக்குச் சீறிக் கொண்டு மேலெழுந்து பாய்ந்தது காஸ்! சிலிண்டரைப் பிடித்துக் கொண்டிருந்த இரண்டு கைகளின் முன் பகுதி, முகம், இடுப்பு, என்று குப்பென்று தீப் பிடித்துக் கொண்டு விட்டது. இத்தனைக்கும் சன்னல்கள் திறந்தே இருந்தன. மின்விசிறி, பிளாஸ்டிக் சாமான்கள், மிக்ஸி எல்லாம் எரிந்து போயின. ஐயோ என்று அலறிய படி, தீப்பிடித்த பருத்திப் புடைவையை உடம்பிலிருந்து வீசிப் போட்டபடி சமையலறையிலிருந்து பாய்ந்து வெளியே வந்தார். பக்கத்து வீட்டுக் குழந்தைகள், தம் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தன; எல்லோரையும் ஓடச் சொன்னார்.

எதிர் வீட்டுக்காரர் கிருஷ்ணகுமார் ஓடோடி வந்து, உடனே தமது காரில் கீழ்ப்பாக்கம் மருத்துவ மனைக்குக் கொண்டு போய் லட்சுமியைச் சேர்த்து விட்டு, டிவிஎஸ் நிறுவனம் ஒன்றில் பணி புரியும் அவரது கணவர் சங்கர நாராயணனுக்குத் தகவல் கொடுத்தார். மூன்று நாட்கள் கே. எம். சி: யில் இருந்த பிறகு, தனியார் மருத்துவ மனைக்குப் போனார் லட்சுமி. பிளாஸ்டிக் சர்ஜரி மருத்துவரின் தீவிர சிகிச்சைக்குப் பிறகு முகமும், இடுப்புப் பகுதியும் ஓரளவு சரியாயின. மிக மோசமாகப் பாதிக்கப்பட்ட கைகள் இரண்டையும், ஸ்டான்லி மருத்துவ

மனையில் ஓரளவு சேர்க்கினார்கள். கிட்டத்தட்ட இரண்டு லட்ச ரூபாய் சிகிச்சைக்காக மட்டும் செலவாயிற்று.

இது நடந்தது ஜனவரி 8, 1988.

இன்னும் இந்தியன் ஆயில் நிறுவனத்துடனும், இன்ஷூரன்ஸ் கம்பெனியுடனும் நஷ்ட ஈட்டுக்காகப் போராடிக் கொண்டிருக்கிறார் லட்சுமி.

**நா**ங்கள் சமீபத்தில் போய்ப் பார்த்த போது, வலது கை விரல்கள் ஓரளவுக்குத் தேறியிருந்தன. இடது கை விரல்கள் இன்னும் உபயோகத்துக்கு வரவில்லை. சமையலறை ஸீலிங், தீ விபத்தில் கரிப் பிடித்துப் போய் இருந்தது. அன்று மின்சாரப் பொறியுடன் காஸ் தொடர்பு கொண்டதன் காரணமாகத் தீப்பிடித்துக் கொண்டிருக்கலாம். "சாதாரணமாக சிலிண்டரில் இருக்க வேண்டிய வாஷர் அதில் இருக்கவே இல்லை. அதுதான் விபத்துக்கு முக்கிய காரணமாய் இருந்திருக்கிறது" என்றார் லட்சுமி. "கணவர் நல்லவராக இருக்கக் கொண்டு என்னை வைத்துக் காப்பாற்றி வருகிறார்.... எனக்கு நான்கு சகோதரர்கள். சிகிச்சைச் செலவுக்கு அவர்களும் உதவினார்கள்!" என்றார்.

"எங்கள் நிறுவனத் தலைவர் சுரேஷ் கிருஷ்ணா கணிசமான தொகை தந்து சமயத்தில் உதவினார். அவரையும், எதிர் வீட்டுக்காரர் கிருஷ்ணகுமாரையும் கோயிலில் வைத்துக் கும்பிட வேண்டும்!" என்றார் சங்கரநாராயணன்.

"சீல் பிரித்து, உங்களிடமுள்ள ரெகுலேடரைப் பொருத்தி, பர்னர் வால்வுகளை மூடிய நிலையில் ரெகுலேடரைத் திறந்து, வாயு கசிவு இல்லை என்று உறுதியாகத் தெரிந்த பிறகு பர்னரைக் கொளுத்திக் காண்பிப்பார்; எரிவாயு கசியும் சிலிண்டர்களை டெலிவரி செய்யமாட்டார் என்று பில்லில் குறிப்பிடப்படுகிறதே? இரண்டாம் சிலிண்டருக்கும் இது பொருந்துமாமே?"

"அவர் சிலிண்டர் கொண்டு வந்த போது குழந்தைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். சிலிண்டரை முன்னறையிலேயே வைத்துவிட்டுப் போகச் சொல்லிவிட்டேன். செக் பண்ணி வாங்க முடியவில்லை." என்றார் லட்சுமி.

இதில் இன்னொரு வருத்தப்படக் கூடிய விஷயம், எடுத்துக் கொண்டு போன — விபத்து உண்டாக்கிய — சிலிண்டருக்குப் பதில், வேறு ஒன்று இதுவரை இவருக்கு வழங்கப்படவில்லை!

"இப்போதும் கூட காஸ் சிலிண்டரை மாற்ற வேண்டும் என்றால், உடம்பு நடுங்குகிறது. கணவர்தான் செய்கிறார்!" என்றார் லட்சுமி.

"இதுவரை நடந்த 3000 காஸ் விபத்துக்களில், ஒரே ஒருவருக்குத்தான் நஷ்ட ஈடு கொடுத்திருக்கிறார்கள். அதுவும் பதினான்கு வருட கோர்ட் கேசுக்குப் பிறகு!" என்றார் சங்கரநாராயணன்.

**இ**து போல் சில விபத்துக்களைக் குறிப்பிட்டார் அகில இந்திய காஸ் விநியோகஸ்தர்கள் சங்கத் தலைவர் முனிவேலு:

OO செம்பியத்தில் ஒரு விபத்து. ஒரு முஸ்லிம் குடும்பத்தில் இரண்டு பேர் இறந்தனர். சிலர் படுகாயமடைந்தார்கள்.

OO ஆவடி விபத்தில் ஒரு மரணம்: மகாதேவன் என்பவரின் தாயார் காலமானார். இறக்கும் முன்னால் நான் போய் மருத்துவமனையில் அவரைப் பார்த்தேன். மிகப் பரிதாபமாய் இருந்தது.

OO பெங்களூரில், சிலிண்டரிலிருந்து காஸ் வெளியாகி, இரண்டு பெண்களும், ஏழு குழந்தைகளும் இறந்தனர். ஏகப்பட்ட பேருக்குக் காயம். அந்தக் குறுகிய சந்தில் இருந்த ஏராளமான முஸ்லிம் குடும்பங்கள் பெருமளவு பாதிக்கப்பட்டிருக்கும். நல்ல வேளையாய், சமயோசிதமாகக் கசியும் சிலிண்டரை உடனே அப்புறப்படுத்தி, தண்ணீர் டிரம்மில் முழுக வைத்தான் டெலிவரி பையன்... இவை ஒருசில சம்பவங்கள் தாம். பட்டியல் போட்டால் நீளும்.

"**இ**ந்தியாவில் காஸ் சிலிண்டர்கள் விநியோகம் செய்யும் 3500 டிஸ்ட்ரிப்யூட்டர்கள் சேர்ந்து, சுமார் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் இன்ஷூரன்ஸ் கம்பெனிக்கு பிரீமியமாகக் கொடுக்கிறோம். ஆனால் மேற்படி விபத்துக்களில் ஏற்படும் உயிர்ச் சேதங்களுக்கு இன்ஷூரன்ஸ் கம்பெனி இன்னும் பணம் கொடுக்கவில்லை!" என்றார் முனிவேலு.

"நீங்கள் வெறும் விநியோகஸ்தர்தானே? நீங்கள் எதற்காகப் பிரீமியம் கட்ட வேண்டும்?" என்று கேட்டோம்.



● முனிவேலு




# நினைத்தபோது பணம்!

இனி எந்த நேரம் வேண்டுமானாலும் பாங்குக்குச் சென்று பணம் எடுக்கலாம்; போடலாம். மெஷின் வந்துவிட்டது. ATM (Any Time Money) என்று அதற்குப் பெயர். அது எப்படி வேலை செய்கிறது? சென்னை ஹாங்காங் பாங்கில் அதிகாரியாகப் பணியாற்றும் திருமதி ரஜினி சொல்கிறார்.

"கணக்கு வைத்திருப்பவர்களுக்கு ஓர் எண்ணும் அடையாள அட்டையும் தரப்படும். அந்த அடையாள அட்டையை இந்த இயந்திரத்தில் அதற்குரிய இடத்தில் செருகி உங்கள் எண்ணுக்குரிய பட்டனையும் அழுத்த வேண்டும். அப்படி அழுத்தினால் அங்குள்ள திரையில், பணம் போட வேண்டுமா அல்லது எடுக்க வேண்டுமா? உங்கள் இருப்புத் தொகை என்ன என்பது போன்ற விஷயங்கள் தெரியும்.

"பணம் போட வேண்டுமானால் அதற்குரிய பட்டனை அழுத்தினால், ஒரு கவர் வெளியே வரும். அதில் போட வேண்டிய பணத்தையோ அல்லது செக் — டிராப்டையோ போட்டு ஒட்டி, கவரை மீண்டும் மெஷினுக்குள்ளேயே போட்டுவிட வேண்டும். எடுக்க வேண்டுமானால் அதற்குரிய பட்டனை அழுத்தித் தொகையையும் பட்டன்களின் மூலம் குறிப்பிட்டால் சில நொடிகளில் ரூபாய் நோட்டுகள் வெளியே வந்துவிடும். பணம் போடுவதற்கும் சரி, எடுப்பதற்கும் சரி, உடனுக்குடன் மெஷினே தாற்காலிக ரசீதுகளையும் தந்துவிடும்.

"மெஷினுக்குத் தெரியாது என்று யாராவது கள்ள நோட்டுகளை டெபாசிட் செய்துவிட்டுப் போனாலும், பிறகு சரிபார்க்கும் அதிகாரிகள் அதைக் கண்டு பிடித்து விடுவார்கள் என்பதால் யாரும் ஏமாற்றவும் முடியாது! இது மேலும் விரிவு படுத்தப்படும்போது, சென்னையிலிருந்து கொண்டே நீங்கள் தில்லியிலுள்ள உங்கள் ஹாங்காங் பாங்க் கணக்கிலிருந்து பணம் எடுக்கவும் போடவும் முடியும்!"

— மௌஷ்மி

"அதுதான் எங்கள் கேள்வியும். ஆயில் கம்பெனிகள் காஸ் தயாரிக்கின்றன. அவர்கள்தான் சிலிண்டர்களையும் வாங்கி நிரப்புகிறார்கள். நாங்கள் இதை வீடுகளுக்கு விநியோகிக்கிறோம். இதில் ஏற்படும் விபத்துகளுக்கு நாங்கள் இன்ஷூரன்ஸ் பாலிஸி எடுக்க வேண்டும் என்ற நிபந்தனை ஒருபுறம் இருக்கட்டும். இன்ஷூரன்ஸ் கம்பெனி, காஸ் சிலிண்டர் பற்றிய டெக்னிகல் ரிப்போர்ட் கேட்டால், ஆயில் நிறுவனங்கள் கொடுக்காமலே இருந்துவிடுகின்றன. எனவே இன்ஷூரன்ஸ் கம்பெனி பணம் எதுவும் நஷ்ட ஈடாகக் கொடுப்பதில்லை!"

"எதனால் விபத்து உண்டாகிறது?"

"எந்த விதத்தில் காஸ் கசிகிறது என்று சொல்லுவது கஷ்டம். ரெகுலேட்டர் சரியாக இருக்காது. சிலிண்டர்கள் சரியாக இருக்காது. வால்வுகளின் மீது ரெகுலேட்டர் சரியாகப் பொருந்தி உட்காராது. சிலிண்டர் வால்வுகளில் வாஷர் இருக்காது. சிலிண்டரிலிருந்து அடுப்புக்குப் போகும் ரப்பர் குழாய் தரமானதாக இருக்காது. கசியும் சிலிண்டர்களும் இப்போது கஸ்டமர்களுக்கே அனுப்பப்படுவதால்தான் விபத்து ஏற்படுகிறது."

"ஏன் அவற்றை விலக்கி வைக்கக் கூடாது?"

"அதற்கு உண்டான சர்டிபிகேட் வாங்கி, அதைக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுத்துப் பணத்தைப் பெறுவதில் சொல்லமுடியாத தாமதம், சிரமம். இது தவிர, பயனில்லாத சிலிண்டர்களை ஏலம் விடும்போது, அதை ஏலத்தில் எடுத்து, அதையும் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் வழியாக விநியோகத்துக்கு விட்டு விடுகின்றனர். இது ஆபத்தானது!" என்று சொன்ன முனிவேலு, "ஆயில் கம்பெனிகள்தாம் சிலிண்டர்களுக்கு உரிமையாளர்கள். அவர்களே ஒரே ஒரு மாஸ்டர் பாலிசி எடுத்து, விபத்தினால் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்க முடியாதா? கதா தோஷி பார்லிமெண்டரி கமிட்டி, இது விஷயமாக பெட்ரோலியம் அமைச்சகத்துக்கு 14.8.86 இல் கொடுத்த அறிக்கையிலும் கூட, ஓரளவுக்ேனும் உடனடியாக நஷ்ட ஈடு கொடுக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தியிருக்கிறது. இருந்தாலும், இன்னும் ஏராளமான காஸ் விபத்துகளில், பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்குப் பணம் எதுவும் கொடுக்கப்படாமலே இருக்கிறது!" என்றார்.

போபால் காஸ் விபத்தில் அந்நிய நிறுவனத்தின் மீது பழியைப் போட்டு ஐந்து வருடங்களைத் தள்ளிவிட்டோம். நம் நிறுவனங்களே நமது மக்களை இப்படி அல்லாட விட்டால் எங்கே போய்ச் சொல்லுவது?

— சாருகேசி.

லைம்
ஸின்த்தால்






அனைத்திலும் புத்துணர்ச்சிமிக்க லைம் சோப்

அனைத்திலும் உன்னதமான லைம் சோப்

துர்நாற்றம் அகற்றும் ஒரே லைம் சோப்

# "நான் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை?"



இதய நோய்க்காளாகி அப்பா சாகும் போது எனக்கு வயது பத்து. அவரது மரணம் திடீரென்று நிகழ்ந்தது. அந்நிகழ்வு எங்களது வாழ்க்கைப் பாதையை முற்றிலும் மாற்றி விட்டது.

இந்திய நாடு அப்போது பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது. அப்பா காட்டி லாகாவில் ஓர் அதிகாரியாகப் பணியாற்றி வந்தார். மாளிகை போன்றதொரு பெரிய வீட்டில் நாங்கள் வசதியுடன் வாழ்ந்து வந்தோம். கூப்பிட்ட குரலுக்கு ஓடி வரும் சேவகர்கள். இன்னும் ஏராளமான வசதிகள். ஒரே நாளில் அத்தனை வசதிகளும் பறிக்கப்பட்டு நாங்கள் நிர்க்கதியாக்கப்பட்டோம்.

அப்போது அம்மாவுக்கு 32 வயதேயாகியிருந்தது. ஏழு குழந்தைகளை அவள் பேணி வளர்க்க வேண்டியிருந்தது. அப்பாவுடன் பிறந்த சகோதரர்கள் எங்களுக்கு ஆறுதல் கூற வந்தனர். ஆனால் யாருமே உதவிக்கரம் நீட்டவில்லை. இதனால் அம்மா மனமுடைந்து போகவில்லை. என்னைப் பெற்றெடுத்த தாய் வைராக்கியம் மிக்கவள். தனது நகை நட்டுகளனைத்தையும் விற்றுவிட்டுக் கராச்சியை விட்டு வெளியேறி தனது தாய், சகோதரன், சகோதரியோடு வாழ்வதற்காக ஹைதராபாத் (சிந்து மாநிலம்) வந்தடைந்தாள்.

அம்மா கட்டுப்பாட்டைக் கறாராகக் கடைப்பிடிப்பவள். அன்பே உருவானவள். ஆனால் உறுதி மிக்கவள். பெண்களை விட ஆண்கள் மேலானவர்கள் என்பது காலாவதியாகிப் போன ஒரு சம்பிரதாயம் என்ற உண்மையை எங்கள் மனத்தில் பதிய வைத்தது அம்மாதான். ஆம். எங்கள் வீட்டில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமமானவர்களே. அன்றாட வீட்டு வேலைகளில் ஆண்களுக்கும் பங்குண்டு. சமையலறையில் கூட என் சகோதரன் எங்களுக்கு உதவி செய்து வந்தான்.

நான் வளர்ந்து வாலிபமானதும் இந்திய சமுதாயத்தில் பெண்களின் நிலை பற்றிச் சிந்திக்கலானேன். நான் ஓர் அழகான பெண். அண்டை வீட்டுக்காரர்கள் என்னை 'சிவப்பு ரோஜா' என்றழைப்பார்கள். பலர் என்னை மருமகளாக்கிக் கொள்ள முன்வந்தனர். ஆனால் படிப்பை முடிக்கும் வரை திருமணப் பேச்சை எடுக்க வேண்டாம் என அம்மாவை நான் மன்றாடிக் கேட்டுக் கொண்டேன்.

எங்கள் குடும்பம் சிந்தி சமூகத்தின் அமில் இனத்தைச் சேர்ந்தது. நாடு விடுதலை பெறுவதற்கு முந்திய அந்த நாட்களிலும் கூட அமில் இனத்துப் பெண்கள் தங்களை வளர்த்துக் கொண்டு, மற்றவர்களைச் சார்ந்து வாழாமலிருக்க அனைத்து வாய்ப்புக்களையும் பெற்றிருந்தனர். அதே சமயம் பெண் வீட்டாரிடமிருந்து பெருமளவு வரதட்சிணை வாங்கும் தீய பழக்கத்திற்கும் இரையாகியிருந்தனர்! திருமணத்தின் போது மணமகளுக்குக் கணக்கு வழக்கின்றிச் சீர் வரிசைகள் செய்ய வேண்டும். ஆயிரம் ஆயிரமாக ரொக்கம், தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் மணமகனுக்கு மட்டுமின்றி, மணமகனின் பெற்றோர்கள், உறவினர்களுக்கும் துணிமணிகள் மற்றும் கட்டில், பீரோ, மெத்தை இத்யாதி... இத்யாதி.

'எவ்வளவு கேவலம். மணமகனை ராஜகுமாரன் என்றழைக்கிறோம். ஆனாலும் தன்னை ஒரு பிச்சைக்காரனாகக் கருதுமாறு அவன் நடந்து கொள்கிறான். தனக்கு ஒன்றுமே இல்லாதது போன்றும், தனது பெற்றோர்களுக்குக் கூடத் தன்னால் எதுவும் வாங்கித் தர இயலாத நிலையில் இருப்பது போன்றும் நடந்து கொள்கிறான்' என்றெல்லாம் அம்மாவிடம் முடிவில்லாத வாதங்களை மேற்கொண்டேன்.

அம்மாவிடம் இதெல்லாம் எடுபடாது. "நீ இப்படி ஒரு நிலை எடுத்தால் உன் தங்கைகளுக்கு நல்ல மாப்பிள்ளைகள் கிடைக்க மாட்டார்கள். பெண்ணின் தாயாரால் அதிக வரதட்சிணை கொடுக்க இயலாதென்று நினைத்துக் கொள்வார்கள்!" என்று கூறினாள்.

"உன்னால் எப்படி முடியும்? என் கல்யாணத்திற்கு இந்தச் சீதனம் எப்படிக் கிடைக்கும்?" என்று கேட்டேன்.

"நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பூர்வீகமான வீட்டை விற்றுக் கொடுப்பேன்," என்று அம்மா பதிலிறுத்தாள்.

"அதெல்லாம்கூடாது." நான்திட்டவட்டமாகக் கூறினேன்.

மூத்த அண்ணன் தலையிட்டார். "கொஞ்சம் கவனி. மூளைக்கு வேலை கொடு. சில பழக்க வழக்கங்களை நாம் கடைப்பிடித்துத் தான் ஆகவேண்டும். சமுதாயத்தின் சட்ட திட்டங்களைப் பின்பற்றத்தான் வேண்டும்..." என்றார்.

"முடியாது. கணவனை விலை கொடுத்து வாங்க மாட்டேன்," என முடிவாகப் பதிலளித்து விட்டேன்.

இன்டர்மீடியட் தேர்வு எழுதுவதற்காக நான் காசிக்குச் சென்ற போது பண்டிட் சிதாராம் சதுர்வேதியைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. அவர் இந்து மதம் தொடர்பான நூல்களைப் படிக்குமாறு என்னை உற்சாகப்படுத்தினார். அவரது வழிகாட்டுதலின் கீழ் நான் வேதங்கள், உபநிஷத்துக்கள், புராணங்கள் மற்றும் ஸ்மிருதிகளைக் கூடக் கற்றறிந்தேன். அவற்றின் பொருளைக் கூறி அவர் விளக்கங்களளித்தார்.

ஹைதராபாத்தில் நான் கல்லூரியில் படித்த போது, சமஸ்கிருதம் பயில்வதற்காக நான் பேராசிரியர் நாராயண்தாஸ் பதிஜாவின் வீட்டிற்குத் தினசரி சென்று வந்தேன். அவரிடம் இரண்டு அல்லது மூன்று மணி நேரங்கள் சம்ஸ்கிருதம் பயில்வேன். இந்தச் சமயத்தில் நான் படித்துக் கொண்டு பொருளீட்டவும் செய்தேன். ஒரு பள்ளியில் இசைப் பயிற்சி தரும் ஆசிரியையாகச் சேர்ந்தேன்.

அம்மா என்னை விடுவதாக இல்லை. கையெடுத்துக் கும்பிட்டுக் கல்யாணம் பண்ணிக் கொள் என்று கண்ணீருகுத்தாள். பெற்று வளர்த்து, ஆளாக்கிய தாயாரின் கண்ணீருக்கு முன் என்னால் என்ன செய்ய முடியும்? திருமணத்திற்குச் சம்மதித்தேன்.

ஓர் எஞ்ஜினியர் மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுத்தனர். பதினையாயிரம் ரூபாய் ரொக்கம் மற்றும் சீர் வரிசைகள் செய்வதற்கு அம்மா சம்மதித்திருக்கிறாள்.

வரதட்சிணை பற்றிக் கேள்விப்பட்ட எனக்குக் கோபம் கோபமாக வந்தது. உள்ளபடியே என்னுள் ஒரு பெரும் போராட்டம். இரவு நேரங்களில் எனக்குத் தூக்கமே வரவில்லை. பகல் நேரங்களில் இதைப் பற்றியே நினைத்துப் பொருமிக் கொண்டிருந்தேன்.

இவ்வாறு ஐந்து நாட்கள் சென்றன. ஆறாவது நான் யாரிடமும் எதுவும் சொல்லாமல் நான் அந்த வரனைப் பார்க்கச் சென்றேன். அவர் எங்கு வேலை பார்க்கிறார் என்று எனக்குத் தெரியும்.

என்னைப் பார்த்ததும் அவர் எழுந்து வந்து வரவேற்றார். நான் நேரடியாக விஷயத்திற்கு வந்தேன்.

"உங்களது வருமானம் எவ்வளவு?"

அவர் ஆச்சரியத்துக்குள்ளானார். அவரது மாதச் சம்பளத்தைக் கூறினார்.

"நான் உங்களைவிட அதிகம் சம்பாதிக்கிறேன். அப்படியிருக்க என் தாயார் உங்களுக்கு எதற்காகப் பணம் தரவேண்டும்?" எனக் கேட்டேன்.

அவர் அதிர்ச்சியடைந்தார். அவரது குரல் கம்மியது. "என்னால் என்ன செய்ய முடியும்? அது தொன்று தொட்டு நிலவும் வழக்கம். உங்கள் அண்ணனும் என் அத்தையும் பேசித்தானே முடிவு செய்துள்ளனர்" என்றார்.

"ஆனால் உங்களைத்தானே நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்.. என் கேள்வி மிகச் சுலபமானது. உங்களை விட நான் அதிகம் சம்பாதிக்கிறேன். அப்படியிருக்கும்போது என் அம்மாவிடம் பதினையாயிரம்ரூபாய்களையும்திருப்பிக்கொடுத்து விட வேண்டாமா? இதற்கு நீங்கள் ஒப்புக் கொள்ளவில்லையென்றால் நான் உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்."

அவர் பதிலேதும் பேசவில்லை.

திருமணம்உறுதி செய்யப்படவிருக்கும் அன்று மாலையில் மாப்பிள்ளை வீட்டாரிடம் அம்மா கொடுத்த அனைத்துப் பொருட்களும், எங்கள் வீட்டிற்குத் திரும்பி வந்து விட்டன.

"அவள் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டாள். இவ்வாறு நடக்குமென்று எனக்குத் தெரியும்," என்று அம்மா அழ ஆரம்பித்து விட்டாள்.

நான் அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டேன். "அம்மா அழாதே. என்னை விட்டுவிடு. மரியாதை, பரம்பரை என்பவற்றின் பெயரால் நான் அவமானத்திற்குள்ளாக விரும்பவில்லை. தனது மானத்தையும், மரியாதையையும் உயர்வாகக் கருதும் ஒரு பெண்ணை ஒடுக்குவதன் மூலம் நமது மதத்தை இழிவுபடுத்தாதீர்கள்!" என மன்றாடிச் சமாதானப்படுத்தினேன்.

திருமணம் செய்து கொள்ளாமலேயே வாழ்கிறேன். எதற்கும் அஞ்சாத் துணிவுடன் எதிர்த்துப் போராடக் கூடிய பெண் நான்.

நன்றி: 1982 — இல் சாகித்ய அகாடமி விருது பெற்ற "எனது வாழ்க்கை ஏட்டின் பொன்னான அத்தியாயங்கள்" என்ற நூலிலிருந்து ஒரு பகுதி. எழுதியவர்: பிரபல சிந்தி எழுத்தாளர் பேராசிரியை பொப்பட்டி ஹீராநந்தினி.

தமிழில்: நெல்லை எஸ். வேலாயுதம்

# தவித்த வாய்க்குத் தண்ணீர் கிடைக்காத ஊர்!

**இத்தொகுதியின் எம். எல். ஏ. (தி. மு. க.) ஏ. சி. தயாளன் என்ன தான் செய்கிறார்? அலசுகிறது இக்கட்டுரை......**



• ஒரு பக்கம் பட்டின் பளபளப்பு....

ஏதாவதொரு வேலை காரணமாக ஆரணிக்குச் செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், கூடவே குடிநீரையும் எடுத்துச் சென்றுவிட வேண்டும். இல்லையென்றால் தவித்த வாய்க்குத் தண்ணீர் கிடைக்காமல் அலைய வேண்டியதுதான். ஒரு பக்கம் பட்டின் பளபளப்பு; மறுபக்கம் குடிநீருக்கான மக்களின் பரிதவிப்பு! இதுதான் இன்றைய நிஜமான ஆரணி.

''குறைந்தபட்சம் பதினாறு நாட்களுக்கு ஒரு முறைதான் ஆரணி நகராட்சி குடிநீர் வழங்குகிறது. இடைப்பட்ட நாட்களில் என்ன செய்வது? குடங்களை எடுத்துக் கொண்டு லோலோவென்று அலைய வேண்டியதுதான். அப்படியும் நல்ல குடிநீர் கிடைக்காது. கிடைத்தது எப்படியிருந்தாலும் தலைவிதியை நொந்து கொண்டு குடிப்பதைத் தவிர வேறு வழியில்லை!'' என்றார் ஆரணி வட்ட மக்கள் சக்தி இயக்கத்தின் அமைப்பாளர் என். தாமோதரன்.

''எங்கள் ராஜாஜி தெருவுக்குத் தண்ணீர் வந்து பத்து வருஷங்களுக்கு மேலாச்சு...'' என்றார் அந்தத் தெருவைச் சேர்ந்த கிருஷ்ணவேணி என்ற பெண்மணி.

''பிரச்னை இந்த அளவுக்கு விஸ்வரூபம் எடுத்திருந்தும் நகராட்சி அப்படியொன்றும் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. முன்பெல்லாம் வாகனங்களின் மூலம் குடிநீர் விநியோகம் செய்த நகராட்சி, இப்போது அதையும் நிறுத்திவிட்டது. எனவே, நிலைமை மேலும் மோசமானது. மக்களின் அவதியைப் பார்க்கப் பொறுக்காமல் எங்கள் மக்கள் சக்தி இயக்கம் கூட ஆழ்குழாய்க் கிணறொன்றை அமைத்துத் தந்திருக்கிறது. இந்தவிஷயத்தில் நகராட்சி மட்டும் தான் நகராத ஆட்சியாகவே இருக்கிறது...'' என்றார் தாமோதரன் மீண்டும்.

இதுகுறித்து ஆளுங்கட்சியான தி. மு. க.

* ஏ. சி. தயாளன் எம். எல். ஏ.

எம். எல். ஏ., ஏ. சி. தயாளன் என்ன சொல்கிறார்?

''ஆரணி மக்களின் குடிநீர்ப் பிரச்னை பூதாகார மானதுதான். நான் சட்டசபையிலும் இதுகுறித்துப் பேசி, உடனடியாகப் பிரச்னையைத் தீர்க்க வேண்டு மென்று அமைச்சரிடமும் கேட்டுக் கொண்டுள்ளேன். எழுபது லட்சம் அளவுக்கு மேல் மக்கள் தொகை கொண்ட ஆரணியின் குடிநீர்ப் பிரச்னைக்கான நிரந்தரத் தீர்வு என்பது பாலாற்றிலிருந்து குடிநீர் கொண்டு வருவதுதான். அதற்கான ஆரம்பக் கட்டப் பணிகள் துவக்கப்பட்டு விட்டன. முன்பு வாகனங்களின் மூலம் குடிநீர் வழங்கிய நகராட்சி, நிதிப் பற்றாக்குறை காரணமாக அதை நிறுத்த வேண்டிய கட்டாயத்திற்குள்ளானது. நிலைமையின் கடுமையை உணர்ந்த நான், மீண்டும் அதைத் துவக்குவதற்கான நிதி வசதிக்கு அரசிடம் முறையிட்டுள்ளேன். சம்பந்தப்பட்ட அமைச்சரும் வாக்குறுதியளித்துள்ளார். விரைவில் மீண்டும் ஆரணி மக்களுக்கு வாகனங்களின் மூலம் குடிநீர் வழங்கப்படும். ஆரணி மக்களின் குடிநீர்ப் பிரச்னைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு காண்பதும், ஆரணியில் ஒரு கல்லூரி அமைப்பதும் எனது தலையாய கடமைகள். நிச்சயம் இவற்றை நிறைவேற்றியே தீருவேன். இதில் யாரும் சந்தேகப்படவே. வேண்டாம். இவற்றை நிறைவேற்றவில்லையென்றால் ஒரு போதும், நான் அடுத்த தேர்தலில் வோட்டுக் கேட்கவே போக மாட்டேன். இது உறுதி!'' என்றார் எம். எல். ஏ.



* .... மறுபக்கம் குடிநீருக்குப் பரிதவிப்பு!

* பார்த்தசாரதி பாகவதர்



''ஆரணிக்கு அருகிலுள்ள செய்யாறில் கூடக் கூட்டுறவு முறையில் வழங்கப்படும் பாலை, பாக்கெட்டுகளில் அடைத்துத்தான் தருகிறார்கள். ஆனால் ஆரணியில் அப்படியில்லை. வெறுமனே அளந்துதான் தருகிறார்கள். பாக்கெட்டுகளில் அடைத்துத் தரும்படி பலர் சொல்லியுங்கூட, அப்படித் தராததற்குக் காரணம், இப்படி வழங்குவதன் மூலம் பாலில் கணிசமான அளவுக்குத் தண்ணீர் கலக்க முடிகிறது. அதனால் கணிசமான அளவுக்குச் சம்பந்தப்பட்டவர்கள் 'சம்பாதிக்க' முடிகிறது என்பதுதான் என்று பலரும் சொல்கிறார்களே, உண்

மையா?''

''உண்மையே அல்ல! 'பாக்கெட்டுகளில் அடைக்கப்படும் பால் பழைய பாலாகத்தான் இருக்கும். ஏனெனில் அதைப் பதப்படுத்தி அடைப்பதற்கு ஒரு நாளாவது ஆகுமே! நாங்கள் எதற்காகப் பழைய பாலை வாங்கிக் குடிக்க வேண்டும்?' என்று சிலர் அபிப்பிராயப்பட்டதால்தான் அப்படி வழங்கப்படவில்லையே தவிர, வேறு காரணங்களுக்காக அல்ல. அதோடு, பாக்கெட்டுகளில் அடைத்தால் விலையும் கொஞ்சம் கூடும் என்பதும் ஒரு காரணம். இருப்பினும் அதில் இப்படியொரு சந்தேகம் இருக்கிறது என்றால் நிச்சயம் அதைப் போக்கப் பாக்கெட்டுகளில் அடைத்துத் தருவதொன்றுதான் வழி. அதில் சிரமமும் இல்லை. உடனடியாகப் பாக்கெட்டுகளில் அடைத்துத்தர ஏற்பாடு செய்கிறேன்!'' என்றார் எம். எல். ஏ.

ஆரணியிலுள்ள பத்தொன்பதாவது வார்டு மக்களுக்குக் குடிநீர் மட்டுமே பிரச்னையல்ல. இப்போது கழிவுநீரும் ஒரு பிரச்னையாகிவிட்டது. ''நாராயணன் தெருவிலுள்ள சுமார் பதினொன்கடி அகலமும் 125 அடி நீளமும் கொண்ட புறம்போக்கு நிலத்தின் வழியாகத்தான் எங்கள் தெரு மற்றும் பக்கத்துத் தெருக்கள் ஆகியவற்றின் கழிவு நீர் சென்றாக வேண்டும். இது நாற்பது ஐம்பதாண்டுகளாகச் சென்று கொண்டிருக்கும் ஒரு வழி. ஆனால், அரசு என்பவர் அந்தப் புறம்போக்கு நிலத்தைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ளத் திடீரென்று ஒரு நாள் சாக்கடையை அடைத்துச் சுவர் கட்டிவிட்டார். நாங்கள் சேர்மனிடம் முறையிட்டும் ஏதும் நடக்கவில்லை. உண்ணாவிரதம் இருந்து போராடி, ஒருவழியாக அச்சுவரை இடிக்கச் செய்தோம். இருந்தாலும் பிரச்னை தீரவில்லை. எத்தனை லட்சம் செலவானாலும் அந்த இடத்தைத் தமதாக்கிக் கொண்டு விடுவதாக அரசு சபதம் செய்திருக்கிறார்...'' என்றார்கள் பி. ஆர். பார்த்தசாரதி பாகவதர் என்பவரும் மற்ற தெருவாசிகளும்.

இதுபற்றி எம். எல். ஏ. விடம் கேட்டபோது, ''அந்த இடம் புறம்போக்கு அல்ல; அரசு என்பவருக்குச் சொந்தமான இடம் தான் அது. இருந்தாலும் அதில் நாற்பதைம்பது ஆண்டுகளாகச் சாக்கடைக் கால்வாய் சென்று கொண்டிருப்பதால் அதைத் தடுத்து நிறுத்துகிற மாதிரி சுவர் எழுப்பக் கூடாது என்றுதான் நானும் சொல்கிறேன். இந்த விஷயத்தில் நான் அந்தத் தெருவாசிகளின் பக்கமே தவிர, அரசு என்பவரின் பக்கம் அல்ல!'' என்று அடித்துச் சொன்னார்.

''ஆரணி ஒன்றியம் என்பது கிழக்கு, மேற்கு என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்றன. இப்போது இரண்டு ஆரம்பச் சுகாதார நிலையங்கள் தான் உள்ளன. இவை போதவில்லை. எனவே, இன்னோர் ஆரம்பச் சுகாதார நிலையம் அவசியம் தேவை. அதற்காக சோமந்தாங்கல் என்ற இடத்தில்—மெயின் ரோடு ஓரத்தில் சுமார் ஆறு ஹெக்டேர் நிலம் உள்ளது. அது எங்கள் பஞ்சாயத்துக்குச் சொந்தமானது. ஆரம்பச் சுகாதார நிலையம் அமைவதாக இருந்தால் அதைத் தருவதற்குத் தயாராக இருக்கிறோம்,'' என்றார் அரியப்பாடி பஞ்சாயத்துத் தலைவர் ஏ. சி. ரத்தினவேலு.

''கடந்த மூன்று மாதங்களுக்கு முன்புதான் முள்ளன்ரம் என்ற இடத்தில் ஓர் ஆரம்ப சுகாதார நிலையத்துக்கான அடிக்கல்லை நாட்டிவிட்டுச் சென்றிருக்கிறார் சுகாதார அமைச்சர். விரைவில் அதன் வேலைகள் துவங்கவுள்ளன. எனவே, நீங்கள் சொல்லுகிற இடத்தில் இன்னோர் ஆரம்ப சுகாதார நிலையம் அமைப்பது குறித்துப் பிறகுதான் முடிவு செய்ய வேண்டும்'' என்றார் ஏ. சி. தயாளன் எம். எல். ஏ.

ஆரணியில் குடிநீர் இல்லாததால் பிரச்னை என்றால், அத்திமலைப்பட்டு என்ற கிராமத்தில் தேவையான அளவுக்கு மேல் குடிநீர் வசதி இருந்தும்கூடப் பிரச்னை!

''ஆமாம் சார்! எங்களூரார் தமக்கு வோட்டுப் போடவில்லை என்ற காரணத்தால் எங்கள் பஞ்சாயத்துத் தலைவரான விஸ்வநாதன் (தி. மு. க.) எங்களூரைக் கவனிப்பதே இல்லை. அதனால் குடிநீர் இருந்தும் அதைப் பெற முடியாமல் தவிக்கிறோம். நீங்களே வந்து பாருங்கள்...'' என்று அங்குள்ள ஆழ்குழாய்க் கிணற்றில் பொருத்



* மதுரப்பெரமட்டூர்: சத்துணவுக் கூடம்.



* நாராயணன் தெரு: இந்தக் கழிவுநீர்க் கால்வாயைத் தான் தடுக்கப் பார்க்கிறார்கள்...



* கிருஷ்ணவேணி: "பத்து வருஷமாச்சு குடிதண்ணீர் வந்து..."

தப்பட்டிருந்த மோட்டாரைக் காட்டினார்கள், அவ்வூர் மக்கள்.

மூன்று குதிரை சக்தி கொண்ட மோட்டார் அது. அது அமைக்கப்பட்டிருந்த மேடையில் சரிவரப் பொருத்தப்படாத நிலை! மோட்டார் ஓடும் போது அது அசையாமல் இருக்க அந்த மேடையோடு நட்டுகள் போட்டுப் பொருத்தப்பட்டிருக்க வேண்டாமா? நட்டுகளே இல்லை. ப்யூஸ் கேரியர்களும் இல்லை, வெறுமனே கம்பி ஒயர்களை ஒட்ட வைத்திருந்தார்கள். எல்லாம் கடனே என்று பொருத்தப்பட்டது போல்தான் இருந்தன!

"ஐந்து குதிரைச் சக்தி கொண்ட மோட்டார் போட்டு ஒழுங்காகப் பராமரித்தால் எங்கள் கிராமத்தில் குடிநீர்ப் பிரச்னையே இருக்காது. தலைவர் விஸ்வநாதன்தான் கவனிக்கவே மாட்டேன் என்கிறார்" என்று வருத்தத்தோடு பெருமூச்சு விட்டார்கள் அந்த மக்கள்.

இந்தப் பிரச்னை குறித்து நாம் எம்.எல்.ஏ.விடம் பேசிக் கொண்டிருந்த போது, தற்செயலாக அங்கே வந்தார் அந்தப் பஞ்சாயத்துத் தலைவர் விஸ்வநாதன். அவரை நமக்கு அறிமுகம் செய்து வைத்த எம்.எல்.ஏ., "அவரிடமே கேளுங்கள்" என்றார் நம்மிடம். கேட்டோம்.

"அதுகுறித்து என்னிடம் யாருமே வந்து புகார் செய்யவில்லையே! செய்திருந்தால் நான் உடனடியாகக் கவனித்திருப்பேனே..." என்றார் விஸ்வநாதன் அப்பாவித்தனமாய்.

"அவர்கள் வந்துதான் சொல்ல வேண்டும் என்பதில்லை. எல்லாம் சரியாக இருக்கிறதா என்று கவனிக்க வேண்டியது தலைவராகிய உங்கள் வேலை..." என்று அவரைக் கடிந்து கொண்ட எம். எல். ஏ. நம்மிடம், "நான் உடனடியாகக் கவனிக்கச் சொல்கிறேன், சார்!" என்றார்.

"கடந்த சட்டமன்றத் தேர்தலின் போது, 'செய்யாற்றில் ஒரு செக்டேம் கட்டி எங்களூரிலுள்ள பெரிய ஏரிக்குத் தண்ணீர் வரச் செய்து தருவோம்' என்பதுதான் எங்கள் கட்சியின் முக்கிய வாக்குறுதியாகச் சொல்லி வோட்டுக் கேட்டோம். அந்த ஏரியை நம்பித்தான் 360 ஏக்கர் நிலம் உள்ளது என்பது முக்கிய விஷயம். மக்களும் எங்களை நம்பினார்கள். வோட்டுப் போட்டு எங்கள் தி. மு. க. வேட்பாளரை வெற்றி பெறச் செய்தும் விட்டார்கள். ஆனால், எம். எல். ஏ. அதுகுறித்து எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. தேர்தல் முடிந்து நன்றியறிவிப்புக் கூட்டத்திற்கு வந்ததோடு சரி. அதன் பிறகு எட்டிப் பார்க்கவே இல்லை. என்ன செய்ய முடியும் எங்களால்? நிலைமை இப்படியே நீடித்தால், தி. மு. க. வின் கோட்டையாகத் திகழும் எங்கள் ஊர், இனி மாற்றுக் கட்சியினருக்கான கோட்டையாகிவிடும்" என்றார்கள் விண்ணமங்கலம் தி. மு. க.



* ஏ. கி. ரத்தினவேலு

* என். தாமோதரன்

இளைஞரணியைச் சேர்ந்த கோவிந்தசாமி, செல்வராஜ், பாண்டுரங்கன், மூர்த்தி ஆகியோரும் மற்றவர்களும்.

தமது சொந்தக் கட்சிக்காரர்களே இப்படி வருத்தப்பட்டுக் கூறுகிற நிலையைச் சுட்டிக் காட்டிய போது, ''ஐயய்யோ... நான் கொடுத்த வாக்குறுதியை மறப்பேனா? அந்த ஏரிப் பிரச்னை குறித்து விண்ணமங்கலம் தி. மு. க. கிளைச் செயலாளர் மூலமாகவே நான் திருவண்ணாமலையிலுள்ள எக்ஸிகியூடிவ் எஞ்ஜினீயருக்கு விண்ணப்பம் அனுப்பியுள்ளேன். அவரும் ஆவன செய்வதாகச் சொல்லியுள்ளார். கூடிய சீக்கிரம் அதற்கான வேலைகள் துவங்கும் என எதிர்பார்க்கிறேன்'' என்றார் எம். எல். ஏ.

''இதுவரை ஆறு முறை இலவச அரிசி வழங்கப்பட்டுள்ளது. அதில் இரண்டு முறைகள்தான் வழங்கப்பட வேண்டிய அனைவருக்கும் வழங்கப்பட்டது. மற்ற நான்கு முறைகளிலும் ஒரு மூட்டை, இரண்டு மூட்டை என்று அரிசி குறைவாகத்தான் வந்தது. வழங்குமிடத்தில் விசாரித்தபோது, 'நாங்கள் என்ன செய்ய முடியும்? வந்தவரை வஞ்சனையின்றி வழங்கியிருக்கிறோம்' என்றார்கள்.

''அதேபோல், எலக்ஷன் சமயத்தில் விண்ணமங்கலம் வழியாக ஆரணியிலிருந்து தேவிகாபுரம் செல்லும் 8-ஏ பஸ் எங்களுக்கு வசதியாக மதுரப்பெரமட்டூர் வரை வந்து சென்றது. தொடர்ந்து அப்படியே வரும் என்றார்கள். வோட்டுப் பதிவு முடிந்ததோ இல்லையோ, அவ்வளவுதான்! பஸ் உடனே வருவதை நிறுத்திக் கொண்டு விட்டது...'' என்றார் முருக்கனந்தல் கிராமத்தைச் சேர்ந்த தயாளன்.

''இலவச அரிசி விநியோகம் நடக்கும் போது நானே பல இடங்களுக்கும் நேரில் சென்று பார்வையிடுகிறேன். அங்கு மட்டும் எப்படிக் குறைந்தது என்று தெரியவில்லை. கவனிக்கிறேன். அடுத்தது பஸ் பிரச்னை. மெயின் ரோட்டிலிருந்து மதுரப்பெரமட்டூர் சென்று வருவதற்கான சுமார் இரண்டு கி. மீ. சாலை மிகவும் மோசம். அதனால் தான் பஸ் சென்று வர முடியாமல் நிறுத்தப் பட்டுவிட்டது. (தேர்தல் சமயத்தில் மட்டும் எப்படிச் சென்று வந்தது என்பதற்குப் பதில்லை!) இப்போது அந்தச் சாலையைச் செப்பனிடும் வேலை நடக்கிறது. அது முடிந்ததும் மதுரப்பெரமட்டூருக்கு நிரந்தர பஸ் வசதி கிடைக்கும்!'' என்ற எம். எல். ஏ., மதுரப்பெரமட்டூரில் உள்ள சத்துணவு சமைக்குமிடம் கூரையின்றிக் கிடப்பது பற்றிச் சம்பந்தப்பட்ட பஞ்சாயத்துத் தலைவரிடம் பேசிச் சரிசெய்வதாகக் கூறினார்.

''ஆரணியிலுள்ள புது பஸ் நிலையத்தைச் சுற்றி ஒரே அசிங்கமாகக் கிடக்கிறதே?''

''அசிங்கமாகக் கிடக்கும் பகுதி பள்ளமான பகுதி. அதை மூடிச் சரிசெய்யும் வேலை துவங்கவுள்ளது. அதோடு அங்கே 45 லட்சம் செலவில் 46 கடைகள் கட்டவுள்ளோம்!''

'''அன்னை டிரேடிங்ஸ்' என்ற பெயரில் மாதா மாதம் பொதுமக்களிடம் சீட்டுப் பணம் வசூல் செய்து ஏமாற்றியதில் உங்களுக்கும் பங்குண்டு என்று சிலர் எங்களுக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்...''

''எனக்கும் அதற்கும் சம்பந்தமேயில்லை. அப்படி ஏமாற்றப்பட்டவர்களுக்குப் பணத்தைத் திருப்பித் தரவேண்டுமென்று சம்பந்தப்பட்டவர்களிடம் கண்டிப்பாகக் கூறியுள்ளேன். அவர்களும் தந்து கொண்டிருக்கிறார்கள்.''

''கடைசியாக ஒரு விஷயம். ஆரணி நகராட்சி அலுவலகத்திற்கு அருகிலுள்ள பெரியார் நகர் என்னும் பகுதியிலுள்ள ஒரு தெருவே புறம்போக்கு நிலத்தில் அமைந்துள்ளது. அரசுக்குச் சொந்தமான புறம் போக்கு நிலத்தை ஆக்கிரமித்திருப்பது ஏழைகள் அல்ல. அங்கே உருவாகியிருப்பவை குடிசைகள் அல்ல. அத்தெருவில் உள்ள எல்லா வீடுகளுமே லட்சக்கணக்கில் செலவழித்துக் கட்டப்பட்ட பக்கா கட்டடங்கள். அனைவருமே வசதியானவர்கள். அதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால், லட்சக்கணக்கில் செலவு செய்து புறம் போக்கு நிலத்தில் வீடு கட்டியிருப்பவர்களில் ஆரணி முனிசிபல் சேர்மன் செல்வரசும் ஒருவர் என்பதுதான். இந்த 'மாடி வீட்டு ஏழை'களுக்கெல்லாம் அந்தப் புறம்போக்கு நிலத்தைப் பட்டா செய்து கொடுப்பதற்கான வேலைகளும் நடந்து கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். இது எந்தவிதத்தில் நியாயம் என்கிறீர்கள்?'' எம். எல். ஏ.விடம் நாம் கேட்டோம்.

இந்தக் கேள்வியைக் கேட்டதும் எம். எல். ஏ. தயாளன் கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டு விட்டார்.

''ஏன் நியாயம் இல்லை? அவர்கள் அந்த இடத்தில் பதினைந்து வருடங்களாகக் குடியிருந்து வருபவர்கள். பதினைந்து வருடங்களில் அவர்களின் வாழ்க்கை முன்னேற்ற மடைந்து பக்கா கட்டடம் கட்டுவதற்கான வசதிகள் வந்திருக்கக் கூடாதா? ஒருவன் ஏழையாகவே இருக்க வேண்டும் என்கிறீர்களா? அவர்கள் கட்டியிருப்பது நியாயம் தான். அவர்களுக்குப் பட்டா வழங்க வேண்டும் என்பதும் நியாயம்தான்...'' என்றார் எம். எல். ஏ.

ஒருவேளை வசதி படைத்தவர்களுக்கும் கூட இலவச வீட்டுமனைப் பட்டா வழங்கும் திட்டத்தைத் தி. மு. க. அரசு, சிக்கனம் கருதி விளம்பரமில்லாமல் செயல்படுத்திக் கொண்டிருக்கிறதோ, என்னவோ?

**— இளங்கோவன்**

வண்ணப்படங்களும், படங்களும்: சுபா



# பகலில் பவுர்ணமி

இடைவேளை வரை பாசம், பரிவு, விளையாட்டு, இளமை, காதல் கற்பனைகளில் மிதக்க விட்ட பிறகு, மேற்படி யதார்த்தத்துக்குச் சற்றும் ஒட்டாத அமானுஷ்ய மர்ம திகில் நிகழ்ச்சிகளிலும் துப்பறியும் இறுக்கத்திலும் கொண்டு போய்த் தள்ளி விட்டார்கள்.

கெடுபிடி காவல் அதிகாரி சிவகுமாருக்கு அடங்கிய குடும்பப் பாசமிக்க அடக்கமான மனைவியாய் ராதிகா. ரகுமான் — லிசா காதல் சேஷ்டைகளைப் புரிந்து கொண்டு சுற்று முற்றும் ஆராய்ந்து, 'நம்ம வீட்டுக் கர்ட்டனுக்கெல்லாம் இப்ப கால் முளைக்க ஆரம்பிச்சிட்டது.' என்று பின்னாலிருந்த லிசாவைக் காதைப் பிடித்து முன்னால் கொண்டு வந்து நிறுத்தி, 'உள்ளே வரத் துணிஞ்சவ வாசல் வழியா வர வேண்டியதுதானே? இப்ப போ. உன்னை எப்ப கூப்பிட்டுக் கனுமோ அப்ப கூப்பிட்டுக்கறேன்,' என்று அங்கீகாரம் கொடுக்கும் போது எத்தனை இதமான எதிர்பார்ப்போடு காத்திருக்கிறோம்!

மனைவி தனக்குத் தெரியாமல் தம்பியைக் கொச்சிக்கு அனுப்ப, அவனும் அவனுடன் சென்ற அடுத்த வீட்டுப் பெண்ணும் காணாமல் போயிருக்கிறார்கள் என்பதை உத்தியோகப் பொறுப்பில் சிவகுமார் புகாராய்க் கேட்டதும் அவருக்கு ஏற்படும் அதிர்ச்சி, குழப்பம், மனைவி மேல் ஆத்திரம், ஏமாற்றம் இத்தனையும் பிரதிபலிக்கும் அந்த அழுத்த நடை, கலங்கிய கண்களில் கனல் — அவை சிவகுமாரின் முதிர்ச்சி முத்திரைகள்.

ரகுமான் — லிசா ஒட்டுறவில் நல்ல இளமைத் துள்ளல்.

அந்த ஓட்டல் மர்மம், மானேஜர் ஹனீபாவின் மர்ம நடவடிக்கைகள், பவுர்ணமி தினத்தில் இயற்கை ருத்ரம், ஹனீபா சடலங்களை இழுத்துப் போய் ஆற்றில் எறிவது, முதலைகள் பாய்ச்சல்—எல்லாம் திகில்கள்தான்.

இதிலே கொலையாளி அந்த மானேஜர்தான் என்று கூடுமானவரை நம்ப வைத்து, இன்வெஸ்டிகேஷனிலும் அது ஊர்ஜிதமாகி, அவரைப் போலீசில் ஒப்படைக்கும் வேளையில், ரகுவரன் வரவழைக்கப்படுகிறார். அவர் சோழி உருட்டி நடந்த கதையை அறிகிறார். அதாவது: ஆற்றில் மூழ்கி உயிர் விட்ட ஒரு சிறுமி பவுர்ணமி தினத்தில் ஆவியாய் வெளிவந்து பாட்டியின் உடலில் ஆவாகனம் செய்ய, பாட்டி அபரிமித பலம் கொண்டு பெரிய பட்டாக் கத்தியோடு ஓட்டல் அறையில் எந்தவொரு தம்பதியையாவது பொலி போட்டு விட்டுப் போகிறது. பாவம் மானேஜர், இது வெளியே தெரியாமல் இருக்க அந்தச் சடலங்களை இழுத்துப் போய் முதலைகளுக்கு இரையாக ஆற்றில் தள்ளுகிறார். சந்தேகத்துக்கு ஆளாகி போலீஸில் சிக்குகிறார்!

இதெல்லாம் நடக்குமா என்று பகுத்தறிவு வாதம் செய்வது ஒருபுறமிருக்கட்டும்; இந்தப் பூச்சாண்டித்தனம் தேவைதானா?

கதைப்படி பகலில் பவுர்ணமி வரவில்லை. படம்தான் பகலில் பவுர்ணமி நிலவு ஆகி விட்டது. பிளாங்கி.

— பி. எஸ். எஸ்.



தரத்தில் உயர்ந்தது
சேவையில் சிறந்தது
ஒரு முறை வாங்கி
உபயோகித்தால் தெரியும்



ZENITH
தையல் மெஷின்கள்

Manufactured & Marketed by:

**BMSC's ஜெனித் சூயிங் மெஷின் ஒர்க்ஸ்**

653, மவுண்ட் ரோடு, ஆயிரம் விளக்கு, சென்னை-600 006. தொலைபேசி: 472559

FREE GIFT        ENQUIRE WITHIN



மலரைப் போன்ற மென்மை.....



Trendmarks

மென்மையான —
கவர்ந்திழுக்கும் தரம்



தேர்ந்தெடுக்கப்பட்ட பருத்தி நூலிலிருந்து
தயாரான டிரெண்ட்மார்க் உள்ளாடைகள்,
T. ஷர்ட்கள் மற்றும் லுங்கிகள்



MARKETED BY
Trendmarks
No: 47, BHARATHI PARK ROAD II CROSS,
SAIBABA COLONY COIMBATORE - 641 011
PHONE: 40758

Media

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 82

## சீனத்து வர்த்தகர்கள்

ஆதிகாலத்திலிருந்து பற்பல தேசங்களிலும் மக்கள் வருங்கால நிகழ்ச்சிகளைப் பற்றி அறிவதற்குப் பிரயத்தனங்கள் செய்து வந்திருக்கிறார்கள். ஏழை எளியவர்களையும் படிப்பில்லாத பாமர மக்களையும் போலவே அரச குலத்தவர்களும் புலமை மிக்க அறிவாளிகளும் எதிர்காலத்தை ஊடுருவிப் பார்க்க முயன்றிருக்கிறார்கள். சோதிட சாஸ்திரிகள், ஆரூடக்காரர்கள், நிமித்தங் கூறுவோர், குறி சொல்லுவோர், ரேகை பார்ப்போர் முதலியவர்கள் கல்வியறிவிலும் நாகரிகத்திலும் சிறந்த சமூகங்களிலும் பல்கிப் பெருகியிருந்திருக்கிறார்கள். அதைப் போலவே, சோதிட சாஸ்திரத்தின் உண்மையைப் பற்றிச் சந்தேகித்து அந்தக் கலையையே கண்டனம் செய்தவர்களும் இருந்து வந்திருக்கிறார்கள்.

அறிவிற் சிறந்த மங்கையர் திலகமான இளையபிராட்டி குந்தவையின் உள்ளத்திலும் இத்தகைய போராட்டம் அடிக்கடி எழுந்து கொண்டிருந்தது. ஆயினும் சோழ சாம்ராஜ்யத்தின் வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்பட நேர்ந்தபோதெல்லாம், அந்தக் கவலை குந்தவை தேவியைச் சோதிடர் வீட்டைத் தேடிப் போகும்படி செய்தது.

நியாயமாகப் பார்க்கப் போனால், இப்போது குந்தவையின் உள்ளம் சுந்தர சோழ சக்கரவர்த்தி பெற்றிருந்த மன அமைதியைப் பெற்றிருக்கவேண்டும். எதிர்பாராத நிகழ்ச்சிகள் என்னென்னவோ நேர்ந்து, அருள்மொழிவர்மர் சோழ சிங்காதனம் ஏறி முடி சூட்டிக் கொள்வது நிச்சயமாகி விட்டது. பிள்ளைப் பிராயத்திலிருந்து குந்தவை தன் இளைய சகோதரனிடம் கொண்டிருந்த எல்லையில்லா வாஞ்சையை நாம் அறிந்திருக்கிறோம். கரங்களில் சங்கு சக்கர ரேகைகளுடன் பிறந்த அருள்மொழிவர்மனால் சோழப் பேரரசு மகோந்நதத்தை அடையப் போகிறது என்று அவள் உள்ளத்தில் பலமான நம்பிக்கை குடிகொண்டிருந்தது. காவேரி வெள்ளத்தில் தவறி விழுந்தவனை, தெய்வமே போன்று வந்த பெண்மணி ஒருத்தி எடுத்துக் காப்பாற்றிய நிகழ்ச்சியும் இன்னும் இதுபோன்ற வேறு பல சம்பவங்களும் அவளுடைய நம்பிக்கையை மேலும் மேலும் வலுவடையச் செய்து வந்தன. அந்த நம்பிக்கை மெய்யாகும் காலம் இப்போது நெருங்கி வந்திருந்தது. ஆனாலும் அந்த அரசிளங்குமாரியின் உள்ளத்தில் இன்னமும் அமைதி ஏற்படாமற் போன காரணம் என்ன?

அருள்மொழிவர்மனைப் பற்றிக் கூறியது போலவே கொடும்பாளூர் இளவரசி வானதியின் ஜாதக விசேஷத்தைப் பற்றியும் பலர் கூறி வந்தார்கள். உண்மையாக நாளையும் கோளையும் ஆராய்ந்து வருங்காலத்தை உணர்ந்துதான் கூறினார்களோ, அல்லது அச்சமயம் குந்தவை தேவிக்கு உவப்பாக இருக்கட்டும் என்றுதான் சொன்னார்களோ, தெரியாது. ஒருமுகமாகப் பலர் சேர்ந்து கூறும் வாக்கு சில சமயம் அதிசயமாக உண்மையாகி விடுவதைப் பார்க்கிறோம். இன்னும் சிலருடைய வாக்கிலேயே ஏதோ விசேஷம் இருக்கிறது. அவர்கள் சொன்னது சொன்னபடி பலித்து விடு

கிறது.

குடந்தையிலிருந்து திருவையாற்றுக்கு வந்து குடியேறிய சோதிடர், அன்றைக்கு மார்கழி மாதத் திருவாதிரை நாள் என்பதை நினைவு கூர்ந்து, "சோழ குலத்துக்கு மிக்க சிறப்பை அளிக்கப் போகும் நன்னாள் அது!" என்று சற்று அழுத்தமாகக் கூறி வைத்தார்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அதே மார்கழித் திருவாதிரையில் சோழர் குலத்தில் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தை வளர்ந்து உரிய பிராயம் அடைந்த போது, சந்திரகுப்தன், அசோகன், விக்ரமாதித்தன், ஹர்ஷ வர்த்தனன் ஆகியவர்களுடன் ஒப்பிடக்கூடிய சக்கரவர்த்தியாகி விளங்கினான். இராஜேந்திரன் என்ற அபிஷேகப் பெயர் பெற்று இலங்கை முதல் கங்கை வரையில், லட்சத் தீவு முதல் ஸ்ரீ விஜயத் தீவு வரையில் வெற்றி கொண்டு ஆணை செலுத்தினான்.

ஜோசியர் கூறிய வார்த்தை இவ்விதம் அதிசயமான முறையில் பின்னால் பலித்து விட்டது. ஆனால் அன்றைக்கு அவர் அவ்விதம் கூறிய போது குந்தவைக்கு அதில் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. வானதிக்கோ சோதிடரின் வார்த்தைகள் கோபத்தையே உண்டாக்கின. அந்தக் கோபத்தை உடனே காட்டுவதற்கு ஒரு வழியும் ஏற்பட்டது.

சோதிடச் சுவடியைத் தூக்கி அந்தப் பெண்ணரசி பூனையின் மேல் எறிந்து விட்டு, "சோதிட சாஸ்திரத்துக்கும் உபயோகம் உண்டு!" என்று கூறினாள்.

அதைக் கேட்ட சோதிடர் திரும்பிப் பார்த்து விஷயம் இன்னதென்பதைத் தெரிந்து கொண்டு, "இளவரசி! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார்கள். அது போல் தங்கள் திருக்கரம் பட்ட மகிமையினால் இந்த ஓலைச் சுவடியும் ஓர் உயிரைக் காப்பாற்றியது. வருங்காலத்தில் எத்தனை எத்தனையோ உயிர்களுக்கு அபயம் அளித்துக் காப்பாற்றப் போகும் மலர்க் கரம் அல்லவா?" என்றார்.

வானதி "அக்கா! இந்தச் சோதிடர் முகஸ்துதி கூறுவதில் மிகவும் கெட்டிக்காரர். வாருங்கள், போகலாம்!" என்றாள்.

"தேவி! இன்றைக்கு நான் சொல்லும் வார்த்தைகள் தங்களுக்குப் பிடிக்கவில்லை. ஒரு காலத்தில் நான் கூறியவையெல்லாம் உண்மையாகியே தீரும். அப்போது இந்த ஏழையை மறந்து விடாதீர்கள்!" என்றார் சோதிடர்.

குந்தவைப்பிராட்டி குறுக்கிட்டு, "ஐயா! இந்தப் பெண்ணுக்குத் தங்கள் வார்த்தைகள் பிடிக்காமலில்லை. கேட்கக் கேட்க இவள் மனத்திற்குள் சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் 'யோசனையில்லாமல் ஏதோ ஒரு சபதம் செய்து விட்டோமே' என்று ஆத்திரப்படுகிறாள்! அந்த ஆத்திரத்தைத் தங்கள் ஓலைச் சுவடியின் பேரில் காட்டினாள்! அதைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம்!" என்று கூறினாள்.

"நல்லவர்களுக்கு வரும் ஆத்திரமும் நல்ல பயனையே அளிக்கும்! தங்களை இனிய மொழியால் அழைத்த என் அருமைக் கிளி பிழைத்தது அல்லவா?" என்றார் சோதிடர்.


ன்னர் குந்தவை சோதிடரிடம் இன்னும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள். முக்கியமாக அருள்மொழி வர்மருக்குத் திருமணம் எப்போது நடக்கும் என்று கேட்டாள். அதைப் பற்றி இளையபிராட்டி குந்தவைக்குக் கவலை ஏற்படக் காரணம் இருந்தது.

ஏனெனில், நேற்றைய தினம் சேநாதிபதி பூதிவிக்கிரம கேசரி இளையபிராட்டியிடம் வந்து, "தாயே! நான் கொடும்பாளூர் போகிறேன். என் சகோதரன் மகள் வானதியையும் அழைத்துச் செல்லலாம் அல்லவா?" என்று கேட்டார்.

குந்தவை திடுக்கிட்டு, "மாமா! இது என்ன அவசரம்? பட்டாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள்?" என்றாள்.

"தாயே! பட்டாபிஷேகத்தின் போது வந்து விடுவேன். அதுவரையில் இங்கு ஏன் காத்திருக்க வேண்டும்? நான் வரும் போது பெரும் சைன்யத்தோடு வந்தேன். தெய்வாதீனமாக, நம்முடைய மனோரதம் சண்டை ஒன்றுமில்லாமலே நிறைவேறுவதாகி விட்டது. சக்கரவர்த்தித் திருமகன் முடிசூட இணங்கி விட்டார். அதை எல்லாச் சிற்றரசர்களும் ஒப்புக் கொண்டு விட்டார்கள். இனி இவ்வளவு பெரிய சைன்யத்தை இங்கு வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. இவ்வளவு பேருக்கும் உணவு அளித்து நிர்வகிப்பதும் தஞ்சை நகரத்தாருக்குச் சிரமமாக இருந்து வருகிறது. ஆகையினால் என் சைன்யத்தை அழைத்துப் போய் அங்கங்கே பிரித்து விட்டு விட்டு வர வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!" என்றார் சேநாதிபதி.

"அப்படியே செய்யுங்கள்! ஆனால் என்

தோழி வானதியை எதற்காக அழைத்துப் போக வேண்டும்?'' என்று கேட்டாள் குந்தவை.

''தேவி! அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. நேற்று சிற்றரசர்களாகிய நாங்கள் எல்லாரும் கூடி யோசித்து ஒரு முடிவுக்கு வந்தோம். தங்கள் பாட்டனார் அரிஞ்சய தேவரின் தந்தையாகிய பராந்தக சக்கரவர்த்தி பெண்ணரசிகள் அறுவரை மணந்திருந்தார். என்னுடைய குலத்திலிருந்தும், மிலாடுடையார் குலத்திலிருந்தும், பழுவேட்டரையர், மழவரையர், சம்புவரையர் குலங்களிலிருந்தும் ஒவ்வொரு பெண்ணை மணந்து கொண்டிருந்தார். ஆகையால் அவருடைய காலத்தில் சிற்றரசர்களிடையில் பூசல் ஏதும் இல்லாமலிருந்தது. தங்களுடைய பாட்டனார் அரிஞ்சயரும் அவ்வாறே பல சிற்றரசர் குலப் பெண்களை மணந்து கொண்டார். அவர் வெற்றி கொண்ட வைதும்பராயர் குலத்திலிருந்து தங்கள் பாட்டியாரை மணந்து கொண்டார். ஆனால் தங்கள் தந்தை இந்த நல்ல வழக்கத்தை அனுசரிக்கவில்லை. தங்கள் அன்னையாகிய மலையமான் மகளாரை மட்டும் மணந்தார். அதனால் சிற்றரசர்களுக்குள்ளே பொறாமையும் பூசலும் விளைந்தன. இனி, இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்கிறவர்கள் பராந்தக சக்கரவர்த்தியையும் அரிஞ்சய தேவரையும் போல் பல சிற்றரசர் குலங்களிலிருந்தும் பெண் கொள்ள வேண்டும் என்று நேற்றைக்கு ஏக மனதாக முடிவு செய்திருக்கிறோம். பொன்னியின் செல்வரின் முடிசூட்டு விழா நடந்த பிற்பாடு அவரிடம் இவ்வாறு விண்ணப்பம் செய்து கொள்ள எண்ணியிருக்கிறோம். வானதியை ஏன் ஊருக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன் என்று தாங்கள் ஊகித்துக் கொள்ளலாமே? அவளை இங்கே விட்டிருந்தால் நான் உடன்படிக்கைக்கு விரோதமாக நடக்கப் பார்க்கிறேன் என்று மற்றவர்கள் சந்தேகிக்கக் கூடும்!'' என்றார் கொடும்பாளூர் வேளார்.

இதைக் கேட்ட குந்தவைக்கு உள்ளத்தில் பெரிதும் ஆத்திரம் உண்டாயிற்று. அதை அவள் வெளிக்காட்டிக் கொள்ளாமல், ''சேநாதிபதி! அன்னை தந்தையை இழந்த தங்கள் தம்பி மகளுக்கு நானே தந்தையும் தாயுமாயிருக்க வேண்டும் என்று முன்னொரு சமயம் கேட்டுக் கொண்டீர்கள். அதை மறந்து விட்டீர்களா? வானதியைக் கொடும்பாளூருக்கு அனுப்ப முடியாது. அவளை விட்டுக் கண நேரமும் என்னால் பிரிந்திருக்க இயலாது. நான் வேண்டுமானால் வானதியையும் அழைத்துக் கொண்டு பழையாறைக்குப் போய் விடுகிறேன். முடிசூட்டு விழாவுக்குக் கூட வராமல் அங்கேயே இருந்து விடுகிறோம். கல்யாணத்தைப் பற்றிய பேச்சே இப்போது வேண்டாம். பட்டாபிஷேகம் ஆன பிறகு சிற்றரசர்களின் விருப்பத்தைப் பொன்னியின் செல்வரிடம் சொல்லுங்கள்! பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்!'' என்றாள்.

சேநாதிபதியும் அதை ஒப்புக் கொண்டு போய் விட்டார்.

குந்தவை தேவி சோதிடரைத் தேடிக் கொண்டு வருவதற்கு இது ஓர் அதிகப்படியான காரணம் ஆயிற்று. ஆகையினாலேயே பொன்னியின் செல்வரின் திருமணத்தைக் குறித்து அவ்வளவு கவலையுடன் சோதிடரிடம் கேட்டாள்.



தே சமயத்தில் வானதியின் நினைவு பழையதொரு சம்பவத்துக்குப் போயிருந்தது. அதிலும் ஒரு பறவையும் பூனையும் பாத்திரங்களாயிருந்தன. பூனையுடன் ஒரு யானையும் யானைப் பாகனும் அதில் சம்பந்தப்பட்டிருந்தார்கள்.

மரக் கிளையிலிருந்து தொங்கிய ஒரு பறவையின் கூட்டை அந்தக் காட்டுப் பூனை தாக்கி அதிலிருந்து பறவைக் குஞ்சுகளைக் கபளீகரம் செய்ய முயன்றது. தாய்ப் பறவை கூட்டைச் சுற்றி வந்து பூனையைத் தடுக்கப் பார்த்தது. வானதி அதைக் கண்டு செய்வதறியாது அலறினாள். நதியில் நீந்திக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன் ஓடி வந்து பார்த்தான். பிறகு அவன் விரைந்து சென்று ஒரு யானையின் மீது ஏறி வந்தான். பறவைக் கூண்டையும் அதிலிருந்த பச்சிளம் குஞ்சுகளையும் அந்தக் காட்டுப் பூனையின் வாயிலிருந்து காப்பாற்றினான்.

அந்த இளைஞன் யானைப்பாகன் என்று வானதி அப்போது கருதினாள். பின்னால் அவன்தான் பொன்னியின் செல்வன் என்று தெரிந்தது. ஆகா! அவன் வெறும் யானைப் பாகனாகவே இருந்திருக்கக் கூடாதா? அல்லது சாதாரண வீரனாயிருந்திருக்கக் கூடாதா? அவன் சுந்தரசோழச் சக்கரவர்த்தியின் திருமகனாக இருப்பதால் அல்லவா தான் இத்தகைய தொல்லைகளுக்கு ஆளாக நேர்ந்தது? தன்னையொத்த தோழிமார்களும், பூங்குழலி போன்றவர்களும், சோழ நாட்டுப் பட்டத்தரசியாக விரும்பும் கள்ள நோக்கமுடையவள் என்று தன்னைப் பற்றி அவதூறு கூறும்படி நேர்ந்தது...!

வானதி இத்தகைய நினைவுகளிலும் குந்தவை வருங்காலத்தைப் பற்றிச் சோதிடம் கேட்பதிலும் ஈடுபட்டிருந்த சமயத்தில், சோதிடரின் வீட்டு வாசலில் ''சினத்துப்

பட்டு வேண்டுமா? சீனத்துப் பட்டு!'' என்ற பெருங் குரல் ஒன்று கேட்டது. வேறு குரல்களும் கேட்டன.

குந்தவையும் வானதியும் தாங்கள் வந்து நேரமாகி விட்டது என்பதை உணர்ந்து எழுந்தார்கள்.

அப்போது சோதிடரின் சீடன் உள்ளே வந்து, ''சுவாமி! சீனத்து வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். தங்களிடம் சோதிடம் கேட்க வேண்டுமாம்! அவர்களை நாளைக்கு வரும்படி சொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

குந்தவை, ''வேண்டாம்! இப்பொழுதே வரட்டும். நாங்கள் விடைபெற்றுக் கொள்கிறோம்'' என்று சொல்லி விட்டு வானதியின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

இளவரசிகள் இருவரும் வாசலில் வந்த போது, அங்கே ஒரு யானை நிற்பதையும் அதன் பேரில் இரண்டு சீன வர்த்தகர்கள் பெரிய துணி மூட்டைகளுடன் உட்கார்ந்திருப்பதையும் பார்த்தார்கள். கீழே நின்ற யானைப்பாகனிடம் அந்தச் சீனத்து வர்த்தகர்கள் ஏதோ கேட்டுக்கொண்டிருப்பதாகத் தோன்றியது.

அவர்கள் மீது அதிக கவனம் செலுத்தாமல் இளவரசிகள் தங்களுடன் வந்த வீரனை அழைத்துக் கொண்டு சோழ மாளிகை போய்ச் சேர்ந்தார்கள்.

## அத்தியாயம் 83

# அப்பர் கண்ட காட்சி



அன்று முன் இரவில் திருவாதிரைத் திருவிழாவை முன்னிட்டு ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் திருவையாற்றின் விசாலமான மாட வீதிகளில் திருவோலக்கம் எழுந்தருளினார்கள்.

வெள்ளிப் பனி மூடிய கைலையங்கிரியை நினைவூட்டுமாறு வெள்ளியினால் அமைத்த கைலாச வாகனத்தில் அன்று சுவாமியையும் அம்மனையும் அலங்கரித்து வீற்றிருக்கச் செய்திருந்தார்கள்.

ஊர்வலத்தின் முன்னணியில் யானைகளும், ஒட்டகங்களும், பெரிய பெரிய ரிஷபங்களும் சென்றன. அவற்றின் மீது ஏற்றியிருந்த பேரிகைகளும் முரசுகளும் எட்டுத் திசைகளும் எதிரொலி செய்யும்படி முழங்கின. அவற்றின் பின்னால் வரிசை வரிசையாகப் பலவகைத் திருச் சின்னங்களை ஏந்தியவர்கள் சென்றார்கள். விதவிதமான வாத்தியங்களை வாசித்தவர்கள் கோஷ்டி கோஷ்டியாகச் சென்றார்கள். நடன கணிகையர் ஆங்காங்கு நின்று நடனம் ஆடி விட்டுச் சென்றார்கள். நந்தி பகவானும், சண்டிகேசுவரரும், விநாயகரும், வள்ளி தேவயானை சமேதரான முருகக் கடவுளும் தனித்தனி விமானத்தில் அமர்ந்து சென்றார்கள். கடைசியாக, பார்வதியும் பரமேசுவரனும் கைலாச வாகனத்தில் அமர்ந்து சேவை தந்து கொண்டு வந்தார்கள்.

இன்னும் பின்னால் தேவார கோஷ்டியினர் வீணை, மத்தளம், தாளம் முதலிய இசைக் கருவிகளுடன் அப்பரும் சம்பந்தரும் சுந்தரரும் பாடிய திருவையாற்றுத் திருப்பதிகங்களை இசையோடு பாடிக் கொண்டு நடந்து வந்தார்கள்.

முன்னாலும் பின்னாலும் ஆயிரமாயிரம் ஜனங்கள் வீதிகளை அடைத்துக் கொண்டு மெள்ள மெள்ள ஊர்வலத்தோடு போய்க் கொண்டிருந்தார்கள்.

ஜனங்கள் அவரவருடைய மனப் போக்குக்கு ஒத்தபடி, சிலர் யானை ஒட்டகை முதலியவற்றைப் பார்ப்பதிலும், சிலர் வாத்திய கோஷ்டிகளின் கீதங்களைக் கேட்பதிலும், சிலர் தேவ கணிகையரின் நடனங்களைப் பார்ப்பதிலும், பெரும்பாலோர் திருவோலக்கம் வந்த தெய்வ மூர்த்திகளைத் தரிசித்துப் பரவசமடைந்து துதிப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

கண்ணுக் கெட்டிய தூரம் முன்னும் பின்னும் நூற்றுக்கணக்கான தீவர்த்திகள் பிரகாசித்து அந்த அபூர்வமான தெய்வ ஊர்வலத்தை ஒரு கனவு லோகக் காட்சியாகச் செய்து கொண்டிருந்தன.





ந்தக் காட்சியைச் சோழ மாளிகையின் மேன் மாடத்திலிருந்து குந்தவையும் வானதியும் பூங்குழலியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். முதன் முதலில் வந்த முரசு சுமந்த யானைகளிலிருந்து கடைசித் தேவார கோஷ்டி வரும் வரையில் ஆர்வத்துடன் பார்த்து மகிழ்ந்தார்கள். பரவச நிலையிலிருந்த பக்தர்களையும் பலவித வேடிக்கைகளில் மனத்தைச் செலுத்தியிருந்த பாமர மக்களையும் பார்த்தார்கள். நந்தி தேவர் முதல் சிவன் பார்வதி வரையில் வீதி வலம் வந்த தெய்வ வடிவங்களையும் அவர்கள் தரிசித்து மகிழ்ந்தார்கள்.

அவ்வளவு ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் ஒரு யானையின் மீது இரண்டு சீன வர்த்தகர்கள் ஏறிக்கொண்டு வருவதையும், அவர்கள் அவ்வப்போது யானை மேலிருந்து கீழிறங்கி ஜனக் கூட்டத்தினிடையில் மறைந்து விடுவ




தையும், பிறகு மறுபடியும் வந்து யானை மீது ஏறிக் கொள்வதையும் கண்டார்கள்.

''ஆகா! இந்தச் சீனர்கள் இருவரும் உண்மையில் வர்த்தகர்களா? அல்லது அயல்நாட்டிலிருந்து வேவு பார்க்க வந்த ஒற்றர்களா?'' என்ற ஐயம் குந்தவையின் உள்ளத்தில் ஏற்பட்டது.

சோழ இராச்சியத்து அரசுரிமை சம்பந்தமாகச் சில நாட்களாக ஏற்பட்டிருந்த தகராறுகள் — குழப்பங்கள் பற்றிய செய்திகள் உலகெங்கும்பரவியிருக்கக் கூடியது இயல்பேயாகும்.

அதை முன்னிட்டு, பகை அரசர்கள் இந்த ஒற்றர்களைச் சீனநாட்டு வர்த்தகர்களின் தோற்றத்தில் அனுப்பி வைத்திருக்கக் கூடும் அல்லவா?

இதைப் பற்றிக் குந்தவையும் வானதியும் பேசிக் கொண்டிருந்தது பூங்குழலியின் காதில் விழுந்தது. அந்தப் பெண், ''தேவி! அவர்கள் கோவில் கோபுர வாசலில் என்னை அணுகிச் 'சீனத்துப் பட்டு வேணுமா?' என்று கேட்டார்கள். நான் அவர்களிடம் 'சோழ மாளிகைக்கு வாருங்கள்; தஞ்சையிலிருந்து இளவரசிகள் வரப்போகிறார்கள்; அவர்கள் ஒரு வேளை வாங்குவார்கள்!'' என்று சொல்லியிருக்கிறேன். ஆகையால் ஒருவேளை இங்கு வந்தாலும் வருவார்கள்! உங்கள் சந்தேகத்தை நேரிலேயே கேட்டுத் தீர்த்துக் கொள்ளலாம்!'' என்றாள்.

அச்சமயம் கைலயங்கிரி வாகனத்தில் அமர்ந்திருந்த ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் சோழ மாளிகையின் வாசலுக்கு வந்திருந்தார்கள். அங்கே சுவாமியை நிறுத்தச் செய்து தீபாராதனை முதலியன நடந்தன. தெய்வ ஊர்வலத்துடன் வந்த செம்பியன் மாதேவியும் அவருடைய புதல்வரும் விமானம் அங்கிருந்து சென்ற பிறகு

அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள் இளவரசிகள் மேன்மாடத்திலிருப்பதை அறிந்து அங்கேயே வந்து சேர்ந்தார்கள்.

உற்சவத்தின் சிறப்பைக் குறித்துச் சிறிது நேரம் சம்பாஷணை நடந்தது. பின்னர், சிவஞான கண்டராதித்தரின் தேவி தம் அருமை மகனைப் பார்த்துக் "குழந்தாய்! இந்தத் திருவையாற்றில் அப்பர் பெருமான் கண்ட காட்சியைப் பற்றி ஒரு பதிகம் பாடியிருக்கிறாரே! அதை நீ ஒருமுறை பாடு. கேட்கலாம்! தேவார கோஷ்டியார் பாடக் கேட்டது எனக்கு அவ்வளவாகத் திருப்தி அளிக்கவில்லை!" என்றார்.

இளவரசிகளும் பூங்குழலியும் அந்தக் கோரிக்கையை ஆமோதித்தார்கள்.

பின்னர், சேந்தன் அமுதனாகிய மதுராந்தகத் தேவர் அந்தப் பதிகத்தைத் தமது இனிய குரலில் பாடினார்.

**"மாதர் பிறைக்கண்ணியானை**
**மலையான் மகளொடும்பாடிப்**
**போதொடு நீர்சுமந்தேத்திப்**
**புகுவாரவர் பின்புகுவேன்**
**யாதுஞ் சுவடுபடாமல்**
**ஐயாறு அடைகின்றபோது**
**காதன்மடப் பிடியோடுங்**
**களிறு வருவன கண்டேன்!**
**கண்டேனவர் திருப்பாதம்!**
**கண்டறியாதன கண்டேன்!"**

இந்த அடியுடன் தொடங்கிப் பின்வரும் பத்து அடிகளையும் மதுராந்தகர் தன்னை மறந்த நிலையில் பாடினார்.

கேட்டுக் கொண்டிருந்தவர்களும் தங்களை மறந்திருந்தார்கள்; அன்று அப்பர் பெருமான் கண்ட காட்சிகளையெல்லாம் அவர்களும் கண்டார்கள்.

பாடல் முடிந்து சிறிது நேரம் வரையில் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது. பின்னர், குந்தவை செம்பியன் மாதேவியைப் பார்த்து, "அம்மா! அப்பர் இந்தப் பதிகம் பாடிய வரலாற்றை முன்னொரு முறை எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். இப்போது இன்னொரு தடவை சொல்லுங்கள்; இவர்களும் கேட்கட்டும்!" என்றாள்.

மற்றவர்களும் வற்புறுத்திக் கேட்டதன் பேரில் பெரிய பிராட்டி செம்பியன்மாதேவி அந்த வரலாற்றைக் கூறினார்:

## அருள்வாக்கு

**தெய்வபரமான சிந்தனையோ, ஆத்மாவைப் பற்றிய நினைப்போ இல்லாமல், அதே சமயத்தில் எந்தவிதமான அறிவு விசாரணையும் செய்யாமல் வெறுமே தின்று கொண்டும், தூங்கிக் கொண்டும் சோம்பேறியாக இருப்பதைவிட, புத்தியைக் கொண்டு ஆராய்ந்து, "ஈச்வரன் இல்லை; நாஸ்திகம்தான் சரியானது" என்ற முடிவுக்கு வந்தால்கூடத் தேவலை என்பேன். ஸத்ய தத்துவத்தைத் தெரிந்துகொள்ள ஒரு முயற்சியும் பண்ணாத சோம்பேறியை விட, தன் மூளையைச் செலவழித்து ஏதோ பரிசிரமப்பட்டு ஒருத்தன் நாஸ்திகமான முடிவுக்கு வந்திருக்கிறான் என்றால், இந்தச் சோம்பேறியை விட அந்த நாஸ்திகன் உயர்ந்தவன்தான் என்பேன். அந்த நாஸ்திகன் இன்னும் ஆராய்ந்து கொண்டே போய்ப் புத்தித் தெளிவு (Clarity) பெற்றானானால் அப்புறம் நாஸ்திகத்தை விட்டுவிடவும் வழி பிறக்கும். ஆனால் இந்தச் சோம்பேறிக்குத்தான் ஒரு வழியும் இல்லை.**

**இதனால்தான் 'சார்வாகம்' என்கிற நாஸ்திக ஸித்தாந்தத்தையும் ஒரு மதமாக ஆதியில் வைத்தார்கள். சாரு + வாகம் என்பதே சார்வாகம். அதாவது கேட்பதற்கு நன்றாக இருக்கிற வாக்கு என்று அர்த்தம். "சாமி, பூதம் என்றெல்லாம் அலட்டிக் கொண்டு, விரதம், தபஸ், இந்திரிய நிக்ரஹம், மனோநிக்ரஹம் என்று அவஸ்தைப்படவேண்டாம். மனம் போனபடி இந்திரியம் போன வழியில் ஆனந்தமாயிருப்போம்" என்று கேட்பதற்கு ரம்யமாகச் சொல்வதால் சார்வாகம் என்று அதற்குப் பேர்.**

**ஆனால் இப்படி நடக்கும் போது ஆனந்தத்தோடு துக்கமும்தானே வருகிறது? அதுதானே அதிகம் வருகிறது? இந்தத் துக்க நிவிருத்திக்குத்தான் சார்வாகம் அல்லாத மற்ற மதங்கள் வழி சொல்கின்றன.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**





ப்பர் சுவாமி பிராயம் முதிர்ந்து உடல் தளர்ச்சியுற்றிருந்த சமயத்தில் கைலையங்கிரிக்குச் சென்று இறைவனைத் தரிசிக்க விரும்பினார். நெடுந்தூரம் வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்தார். மேலே நடக்க முடியாமல் களைத்து விழுந்தார். அச்சமயம் ஒரு பெரியவர் அங்கே தோன்றி, ''அப்பரே! கைலையைத் தேடி நீர் எங்கே செல்கிறீர்? பொன்னி நதிக்கரையிலுள்ள திருவையாற்றுக்குச் செல்லுங்கள்! பூலோக கைலாசம் அதுதான்!'' என்று அருளிச் செய்து மறைந்தார். அது இறைவன் வாக்கு என்று அறிந்த அப்பர் திரும்பித் திருவையாறு வந்தார். அந்த ஸ்தலத்தை நெருங்கி வந்த போதே அவருடைய உள்ளம் பரவசம் அடைந்தது. பல அடியார்கள் கையில் பூங்குடலையும் கெண்டியில் காவேரி நீரும் ஏந்தி ஐயாறப்பனைத் தரிசிப்பதற்காகச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்கள் இறைவனுடைய புகழைப் பாடிக்கொண்டு சென்றார்கள். அவர்கள் பின்னால் அப்பரும் சென்றார். அப்போது திருவையாறு நகர்ப்புறத்தில் ஆணும் பெண்ணுமாக இரு யானைகள் வந்தன. அந்தக் களிறும் பிடியும் சிவமும் சக்தியுமாக அப்பருக்குக் காட்சி அளித்தன. ஆலயத்தை அடைவதற்குள் இவ்வாறு பல விலங்குகளையும் பறவைகளையும் ஆண் பெண் வடிவத்தில் அப்பர் பார்த்தார். கோழி பெடையோடு கூடிக் குலாவி வந்தது; ஆண் மயில் பெண் மயிலோடு ஆடிப் பிணைந்து வந்தது. அருகிலிருந்த சோலையில் ஆண் குயிலோடு பெண் குயில் பாடிக் களித்துக் கொண்டிருந்தது; இடிமுழக்கக் குரலில் முழங்கிக் கொண்டு ஏனம் ஒன்று அதன் பெண் இனத்தோடு சென்றது; நாரையும் அதன் நற்றுணையும் சேர்ந்து பறந்து சென்றன; பைங்கிளியும் அதன் பேடையும் பசுமரக் கிளைகளில் மழலை பேசிக்கொண்டிருந்தன; காளையும் பசுவும் கம்பீரமாக அசைந்து நடந்து சென்றன. இவ்வாறு ஆணும் பெண்ணுமாக அப்பர் சுவாமிகளின் முன்னால் தோன்றியவையெல்லாம் சிவமும் சக்தியுமாக அவருடைய அகக் கண்ணுக்குப் புலனாயின. உலகமெல்லாம் சக்தியும் சிவமுமாக விளங்குவதைக் கண்டார். ''இந்த உலகமே கைலாஸம்; தனியாக வேறு கைலாஸமில்லை'' என்று உணர்ந்தார். இத்தகைய மெய்ஞான உணர்ச்சியோடு மேலே சென்ற போது, ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் கைலாஸ வாகனத்தில் எழுந்தருளி வீதி வலம் வருவதையும் பார்த்தார். தாம் அன்று புறக் கண்ணாலும் அகக் கண்ணாலும் பார்த்து அனுபவித்ததையெல்லாம் ஒவ்வொன்றாக இனிய தமிழில் இசைத்துப் பாடி அருளினார். இத்தனை காலமும் தாம் கண்ணால் கண்டும் கருத்தினால் அறியாமலிருந்தவற்றை இன்று திருவையாற்றில் கண்டு அறிந்து கொண்டதாக ஒவ்வொரு பாடலின் முடிவிலும் ''**கண்டறியாதன கண்டேன்!**'' என்று திரும்பத் திரும்ப வியந்து வியந்து கூறினார்.



திய எம்பிராட்டியார் கூறி வந்த இந்த வரலாற்றை எல்லாரும் மெய்மறந்து கேட்டுக் கொண்டு வந்தார்கள்.

வரலாறு முடிந்த பிறகு கொடும்பாளூர் இளவரசி ஒரு கேள்வி கேட்டாள்:— ''அம்மா! அப்பர் சுவாமிகள் விலங்கினம் — பறவை இனங்களின் காதலைக் குறித்து இப்படியெல்லாம் வியந்து வியந்து கூறியிருக்கிறாரே? மனித இனத்தைப் பற்றி மட்டும் ஏன் குறிப்பிடவே இல்லை?'' என்றாள்.

''மனித குலத்தில் பிரதிப்பயனை விரும்பாமல் உண்மையான அன்பு கொண்ட ஆண் — பெண்கள் இல்லவே இல்லை. அதனாலேதான் அப்பர் மனித குலத்து ஆண் பெண்களைக் குறிப்பிடவில்லை!'' என்றாள் பூங்குழலி.

''அது சரியல்ல, மகளே! உன்னையும் என் மகனையும் அப்பர் சுவாமிகள் பார்த்திருந்தால், மனித குலத்தின் காதலையும் சேர்த்துக் கொண்டு பாடியிருப்பார்!'' என்றார் செம்பியன்மாதேவி.

''ஆமாம்; ஆமாம்!'' என்று மற்ற இரு பெண்மணிகளும் ஆமோதித்தார்கள்.

இந்தச் சமயத்தில் அந்த மாளிகையின் வாசலில் ஏதோ சலசலப்பு உண்டாயிற்று. சேவகன் ஒருவன் உள்ளே வந்து, ''சீனத்துப் பட்டு வர்த்தகர்கள் இருவர் வந்திருக்கிறார்கள். இளவரசிகளைப் பார்த்து விட்டுத்தான் போவோம் என்கிறார்கள்!'' என்றான்.

இளையபிராட்டி வியப்பும் கோபமும் அடைந்து, ''அவர்கள் யார் அவ்வளவு அதிகப் பிரசங்கிகள்? இப்போது ஒன்றும் வேண்டாம் என்று சொல்லி அவர்களைப் போகச் சொல்!'' என்றாள்.

இதற்குள் பூங்குழலி, ''தேவி! அவர்களை நான் வரச் சொல்லியிருந்தேன். மன்னிக்க வேண்டும்!'' என்றாள்.

''அப்படியானால் வந்து விட்டுப் போகட்டும்!'' என்றாள் இளையபிராட்டி.

சற்று நேரத்துக்கெல்லாம் சீனத்து வர்த்தகர்கள் இருவரும் இரண்டு மூட்டைகளுடனே அங்கு வந்தனர்.

(தொடரும்)

# க்ளீன் போல்ட்

ஸ்மிதா எலெக்ட்ரிகல் கம்பெனியின் வாசலில் பூட்டு தொங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்ததும், மாதவனுக்கு மயக்கமே வரும்போல இருந்தது. "ஐயையோ, இன்று எப்படி கிரிக்கெட் மேட்சைப் பார்க்க முடியும்?"

கிரிக்கெட்டில் ஆர்வம் கொண்ட பலரை நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஆனால் மாதவன் அதில் கொஞ்சம் 'அதி அதீத ஆர்வ' வகை. அதாவது ஆர்வம், விருப்பம், வெறி போன்ற கட்டங்களைத் தாண்டிய நிலை. மியாண்டாட் ஷர்மாவின் கடைசிப் பந்தில் சிக்ஸர் அடிக்க, அதனால் பாகிஸ்தான் ஷார்ஜா பந்தயத்தில் வெற்றி பெற்றதைப் பார்த்ததும் மூன்று நாட்கள் ஜுரத்தில் விழுந்தவன் மாதவன். கிரிக்கெட் போர்ட் ஆறு விளையாட்டு வீரர்களுக்குத் தடையுத்தரவு போட்டபோது, சாப்பாடு சரியாக இறங்க ஒரு வாரமாயிற்று அவனுக்கு.

மாதவனின் கிரிக்கெட் பித்தை உங்களுக்குச் சரியாக விளங்கச் செய்ய வேண்டுமானால், அவன் கல்லூரியில் ஆங்கிலப் பாடத்தில் 'கோட்' அடித்ததைத்தான் குறிப்பிட வேண்டும். அந்தப் பாடத்தில் மட்டும் அவன் குறைந்த மதிப்பெண்கள் வாங்கியதற்குக்காரணம், அவர்கள் சிலபஸில் இருந்த பெர்னார்ட் ஷாவின் நாடகம் ஒன்றை மாதவன் படிக்க மறுத்தது தான். கிரிக்கெட்டைப் பற்றி மிகக் கேவலமான கருத்துக் கொண்டிருந்த ஒருவரின் படைப்பைத் தான் படிப்பதாவது!

அது சரி, ஸ்மிதா எலெக்ட்ரிகல் கம்பெனியின் வாசலில் மாதவன் மயக்கம் வரும் நிலைக்கு ஆளானதேன் என்கிறீர்களா? கிரிக்கெட் பந்தயங்கள் நடக்கும்போதெல்லாம் லீவ் எடுத்துக் கொண்டு மேட்சுகளை நேரிலோ, டீவியிலோ கண்டு களித்துக் கொண்டிருந்த மாதவனின் லீவ் கணக்கு விரைவில் இருப்பு இல்லாமல் போனது. நல்ல வேளையாக அவன் அரசு நிறுவனத்தில் வேலை செய்தது சௌகரியமாகப் போயிற்று. அட்டெண்டென்ஸில் கையெழுத்துப் போட்டுவிட்டு, அலுவலகத்தின் எதிரே உள்ள ஸ்மிதா எலெக்ட்ரிகல் கம்பெனியில் நுழைந்து விடுவான். அங்கு டீவி போட்டிருப்பார்கள். அதைப் பார்ப்பதும் நடு நடுவில் பத்து நிமிடங்கள் அலுவலகத்தில் தலைகாட்டுவதும் மாதவனின் வாடிக்கையாகிப் போனது. (அந்தப் பத்து நிமிஷங்களும் தான் கண்ட மேட்சைப் பற்றித் தன் தோழர்களுக்கு விஷயதானம் செய்யப் பயன்படும்என்பதுவேறுவிஷயம்). அப்படிப்பட்ட மாதவனுக்கு அந்த வாடிக்கையான கம்பெனி ஏதோ காரணத்திற்காக மூடியிருப்பதைக் கண்டால் ஏன் தலை சுற்றாது? மயக்கம் வராது?

இப்போது என்ன செய்வது? தவித்துக் கொண்டிருந்த மாதவனை ஒரு நடுங்கும் குரல் இழுத்தது. "ஏண்டா தம்பி, என்னைத் தெருவின் அந்தப் பக்கத்துக்கு அழைச்சிக்கிட்டுப் போயேன்."

அந்தப் பாட்டியின் கையை வேண்டா வெறுப்புடன் பிடித்துக் கொண்டு தெருவைக் கடந்தான் மாதவன். அவன் அந்தப் பாட்டியைப் பார்த்திருக்கிறான். அவன் அலுவலகத்துக்குப் பக்கத்துக் கட்டடம்தான் அந்தப் பாட்டியின் வீடு. ஆனால் இன்று பாட்டியின் வீட்டின் மேலிருந்த ஒரு பொருள் பளிச் சென்று பட்டது. டீவி ஆன்டெனா!

"போறும்ப்பா. நீ நல்லாயிருக்கணும்."

"இருக்கட்டும் பாட்டி, நான் உங்க வீட்டுக்குள்ளேயே வந்து விட்டுட்டுப் போறேன்."

பாட்டியின் வீட்டுக்குள் நுழைந்தவனின் கண்கள் ஆவலுடன் தேடிய பொருள் டீவி! உயிரற்று இருந்தது.

கூடத்தில் காத்திருந்த ஓர் இளம்பெண், "ஏன் பாட்டி, உங்களை யார் தனியாகத் தெருவுக்கெல்லாம் போகச் சொன்னது?" என்று பாட்டியைக் கேட்க ஆரம்பித்தவள், பின்னால் வந்த மாதவனைப் பார்த்ததும் தன் பேச்சை நிறுத்திக் கொண்டாள்.

"கோவப்படாதே சொர்ணா. லெட்டர் போஸ்ட் பண்ண எதிர்ப் பக்கம் போனேன். கொஞ்சம் படபடப்பாப் போயிடுத்து. அதுதான் இந்தப் பிள்ளையாண்டானின் கையைப் பிடிச்சிண்டு வந்தேன்."

மாதவன் ஒரு கணம் வைத்த கண் வாங்காமல் சொர்ணாவைப் பார்த்தான். பிறகு சுதாரித்துக் கொண்டு, "பாட்டி, டீவி போடலியா?" என்றான்.

"இப்போ என்ன இருக்கு டீவியிலே?" என்று ஆச்சரியப்பட்டாள் பாட்டி.

அருண் சரண்யா

சொர்ணாவுக்கு மாதவனைப் பார்க்கப் பாவமாக இருந்தது. டீவியைப் போட்டான்.

"ஓ இந்த முடியாத ஆட்டமா? உட்கார்ந்து தான் பாரேன்" என்று பாட்டி சொல்லி முடிப்பதற்குள் அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்து விட்டிருந்தான் மாதவன்.

அடுத்த பதினைந்து நிமிடங்களில் சோபாவின் நுனிக்கு வந்து விட்டிருந்தான் அவன். "இந்தியா ஜெயிக்கணும்" என்று வாயை விட்டுக் கத்தினான். பாட்டிக்கு ஒரே சந்தோஷம்.

"என்ன ஒரு தேசபக்திடாப்பா உனக்கு. என் பிள்ளையும் அப்படித் தான். ராணுவத்திலே சேர்ந்து, சீனாவோட நடந்த யுத்தத்திலே, நம்ம நாடு ஜெயிக்கத் தன்னாலே முடிஞ்சதையெல்லாம் செய்தான்."

"பாட்டியின் தொனியிலிருந்து அவள் பிள்ளை இப்போது உயிருடனில்லை என்பதை ஊகிக்க முடிந்தாலும், அதுபற்றி மேலும் விவரங்கள் கேட்டால், கிரிக்கெட் ஒளிபரப்பில் கணிசமான பகுதியை இழக்க வேண்டியிருக்குமே என்பதால் மாதவன் மௌனம் சாதித்தான்.

"பக்கத்து ஆபீஸிலேதானே வேலை செய்யறே? எப்போ வேணும்னாலும் நீ இங்கே வந்து டீ. வி. பார்க்கலாம்" என்று பாட்டி உபசாரமாகச் சொன்னாள் மாதவன் அன்று கிளம்பிய போது.

அதற்குப் பிறகு கிரிக்கெட் மேட்சுகளை டீவியில் பார்க்கப் பாட்டியின் வீட்டுக்குப் போவது அவனுக்கு வழக்கமாகிப் போனது. ஸ்மிதா எலெக்ட்ரிகல் கம்பெனிக்கு இப்போதெல்லாம் அவன் போவதேயில்லை. பாட்டி வீட்டில் உள்ள உட்காரச் சுகமான சோபா, ஐஸ் வாட்டர், நொறுக்குத் தீனி, கண்ணுக்குக் குளுமையாக அவ்வப்போது தென்பட்டு மறையும் சொர்ணா — இத்தனை சௌகரியங்களும் அந்தக் கடையில் கிடையாதே! ஒரே அவஸ்தை என்னவென்றால், பாட்டியின் தொண



தொணப்பான கேள்விகளைச் சகித்துக் கொண்டிருக்க வேண்டியிருந்ததுதான். ஆனால் பாட்டியின் கேள்விகளை அவன் தேவாமிருதமாகக் கருதிய நாளும் விரைவில் வந்தது.

பாட்டிதிடீரென்றுஒருநாள்கேட்டாள். "ஏண்டாப்பா, உனக்குக் கல்யாணமாகலியோன்னோ?" கல்யாணமாகிவிட்டதா என்று கேட்பதற்குப் பதில், கேள்வியை வேறு மாதிரி கேட்டதிலிருந்தே பாட்டியின் உள்ளம் புரிந்து போக, மாதவனுக்கு உடலெங்கும் மின்சார அதிர்ச்சி. இவ்வளவு பெரிய வீடும் பெற்றோர்கள் இறந்து விட்டதால் சொர்ணாவின் பேரில் — அதாவது நாளைக்குச் சொர்ணாவுடன் வீடும் தனக்குச் சொந்தமாகப் போகிறது. கண்கள் கனவுகளில் மிதக்க, உதடுகள் பதிலைக் கூறியது.

"இல்லே பாட்டி!"

தொடர்ந்து பாட்டி அவன் கோத்திரத்தையும், நட்சத்திரத்தையும் கேட்க, மாதவனின் எண்ணம் உறுதிப்பட்டது.

அதற்குப் பிறகு கிரிக்கெட் மேட்ச் டீவியில் ஒளிபரப்பப்படாத நாட்களில் கூட அங்கு 'கர்ட்டசி விசிட்' செய்ய ஆரம்பித்து விட்டான் மாதவன்.

ஒருநாள் தாளிடாமல் சாத்தியிருந்த கதவைத் திறந்து வீட்டினுள் நுழைந்தபோது, சொர்ணா மட்டும் தனியாக இருந்தாள்.

"வாங்க மிஸ்டர் மாதவன். பாட்டி பக்கத்துத் தெரு கோயிலுக்குப் போயிருக்காங்க. இன்னிக்கு வைகுண்ட ஏகாதசின்றதாலே நாள் முழுதும் கோயில் திறந்திருக்கும். அதுவும் நல்லதுக்குத்தான். நானே உங்க கிட்டே கொஞ்சம் பேசணும்னு இருந்தேன்."

இவ்வளவு நாள் வாயே திறவாத சொர்ணாவா இன்று இவ்வளவு பேசுகிறாள்? வியப்புடன் உட்கார்ந்தான்.

கொஞ்ச நேரம் சொர்ணா எதற்கோ தயங்கியது தெரிந்தது. பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவள் போல் பட்டென்று, "எங்க பாட்டிக்கு நம்ம ரெண்டு பேருக்கும் கல்யாணம் செய்துடணும்கிற ஆசை ஏற்பட்டிருக்கிறது. அதற்காகத்தான் உங்க கோத்திரம், விலாசத்தையெல்லாம் விசாரிச்சாங்க."

"அதைக் கூட புரிஞ்சுக்க முடியாத முட்டாளில்லே நான்" என்றான் மாதவன் புன்னகையுடன்.

"இருக்கலாம், ஆனா நான் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதிக்கப் போறதில்லேங்கிறதை ஊகிக்க முடிந்த அளவுக்கு நீங்க புத்திசாலியா?"

மாதவனின் முகத்தில் நிழல் படிய, சொர்ணா தொடர்ந்தாள். "நீங்க ஆபீசிலே ஒரு பொறுப்பான பதவியிலே இருக்கீங்க. மேலே இருக்கிறவங்க தட்டிக் கேட்க மாட்டாங்கங்கிற தைரியத்திலே இஷ்டப்பட்ட நேரத்துக்கு இங்கே வந்து மணிக்கணக்கா டீவி பார்க்கிறீங்களே? உங்கள் நிறுவனத்திற்கு நீங்கள் விசுவாசமாக இருக்க வேண்டாமா?"

"இதற்கா அலட்டிக் கொண்டீர்கள்?" மாதவன் கலகலவென்று சிரித்தான். "இந்தக் காலத்திலே யார்தான் உண்மையாக உழைக்கிறாங்க? சந்தர்ப்பம் கிடைக்காத வரைதான் தப்புச் செய்யாம இருக்க முடியும்கிற மாதிரி, ரொம்பக் கட்டுப்பாடான நிறுவனத்திலே இருப்பவங்கதான் ஒழுங்காக வேலை செய்வாங்க. இதற்கும் நம் கல்யாணத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?"

"ஒருத்தர் குணாதிசயம் வீட்டிலேயும், ஆபீசிலேயும் நேரெதிராக இருக்க வாய்ப்பு கம்மி. அது மட்டுமில்லே. என் அப்பா ராணுவத்தில் சேர்ந்து தன் வாழ்க்கையின் முக்கிய கட்டங்களையெல்லாம் நாட்டுக்காக அளித்தார். என் அம்மா ஒரு நர்ஸ். நேரத்தின் அருமையை எனக்கு அழுத்தமாகப் போதிச்சவங்க அவங்க. இப்போ அவங்க ரெண்டு பேரும் இல்லேன்னாலும், என் உடம்பிலே ஓடறது அவங்க ரத்தம்தான். அதனாலே உங்களைப் போல பொறுப்பில்லாத, விசுவாசமில்லாத ஒருவரை நான் கல்யாணம் செய்து கொள்ளத் தயாரில்லை. சாரி". சொர்ணாவின் குரலில் உறுதி இருந்தது.

"ஏம்பா...,, டிபன் இன்னைக்குள்ள வந்துருமா?"

"என்னைக்கு சார் ஆர்டர் கொடுத்தீங்க....?"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா



"அந்தக் 'கடி' ஜோக் எழுத்தாளருக்கு ஏதோ ஒரு பட்டம் கொடுத்தாங்களாமே, என்ன பட்டம்?"

"'Dogடர்' பட்டம்தான்...!"

— மணிமூர்த்தி



# இப்போது மேலும் பல நலன்களுடன்

# டோட்டல்

நீல நிற டிடர்ஜன்ட் பார்

**வசதியான நான்கு வில்லைகள்:**
எளிதில் ஒவ்வொரு பகுதியாக பிரித்து சிக்கனமாக உபயோகிக்க வகை செய்கிறது.

**அதிகமான டிடர்ஜன்ட் சக்தி:**
இதிலுள்ள ஆப்டிகல் வைட்னர் பிரகாசமான வெண்மையை கொடுக்கும் திறன் கொண்டது.

**பொங்குகின்ற நுரைவளம்:**
சிறிதளவு தேய்த்தாலும் அதிக நுரைவளத்தை கொடுத்து அழுக்கை எளிதில் போக்குகிறது.

**உயர்தரமான மதிப்பு:**
மற்ற டிடர்ஜன்ட் கட்டியை விட இரு மடங்கு (300 கிராம்) உள்ளதால் கூடுதலான சலவையையும் பளிச்சிடும் வெண்மையையும் கொடுத்து உங்கள் பணத்திற்கு ஏற்ற உயர்தர மதிப்பையும் கொடுக்கிறது.

MCA TDB-58/TAM




சிக்கனமான சலவை
பளிச்சிடும் வெண்மை

MSIL
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

# மணல்வெளி மான்கள்

## 22

வக்கீல் வருவார் என்று கௌதம் எதிர் பார்க்கவில்லை. இரவு எட்டு மணிக்கு வந்தார்.

''க்ளையண்ட் ஒர்த்தன் கல்யாணம், பெருமாள் கோவில்லே. விடி காலைலே முகூர்த்தம் வச்சிருக்கான். நான் வரச் சௌகரியப் படாதேப்பான்னா மாப் பிள்ளை அழைப்புக்காவது வந்துடணும்னு ஒத்தைக்கால்லே நின்னான்... சரின்னு வந்தா ஊர்லஹும் பேச்சுந்தான் நடபுடலா அடிபடறது. சரி வந்தது வந்தோம் பார்த் துட்டுப் போயிட்லாம்னு தோணிச்சு.''

கௌதம் படுக்கையிலிருந்து எழுந்து உட் கார்ந்தான்.

''நோ நோ.... எழுந்திருக்காதே... படுத் துண்டே பேசலாம்.

''படுக்கையிலே படுத்துக்கற மாதிரி பெரிய அடி ஒண்ணுமில்லே சார். எல்லாம் உள்காயம்.''

''இன்ஸிடெண்ட் எப்ப நடந்தது?''

''நேத்து ராத்திரி மணி ஏழரை இருக்கும்."

''ஒரு க்ரூப்பா?''

கௌதம் விவரித்தான். அவர் ஒரு வார்த் தை விடாமல் எந்தக் கேள்வியும் போடாமல் உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டார்.

''ஓகே... இது ப்ளாண்ட் அஸால்ட். நேத் திக்கு இல்லேன்னாலும் இன்னொரு நாளைக்கு நடந்திருக்கப் போவுது. போலீஸ் கிட்டே நீ கம்ப்ளைண்ட் மாதிரி எதுவும் தர மாட்டேன்னுட்டியாமே?''

''யார் சார் சொன்னது?''

''இன்ஸ்பெக்டர் இருதயராஜ் தான். வர்ற வழிலே ஸ்டேஷனுக்குப் போயி விசாரிச்சுட்டுத்தானே வர்றேன்.''

ஜன்னலுக்கு வெளியே ட்யூப் விளக் கொளியில் வக்கீல் வந்த கார் நிற்பது தெரிந் தது. உள்ளூர. நன்றி சுரந்தது. மாப்பிள்ளை அழைப்புக்கு வந்தவருக்கு ஆஸ்பத்திரிக்கும் போலீஸ் ஸ்டேஷனுக்கும் ஏன் அலையத் தோன்றுகிறது?

''ஆமா சார்!''

காரணம் கேட்கவில்லை. சொல்வான் என்று அவர் எதிர் பார்ப்பது புரிந்தது.

''அநாவசியமான இசைதிருப்பல் வேணாம்னு தோணிச்சு.''

''யூ மிஸ் த சான்ஸ். துளசிங்கம் தான் அடிச்சான்னு கம்ப்ளெயிண்ட் எழுதிக் கொடு. பின்னணியிலேர்ந்து அவனை வெளியே இழுப்போம்.''

கௌதம் சுற்று முற்றும் பார்த்தான். எவரும் அவர்களைக் கவனிக்கவில்லை. வக்கீல் அவனது விழிப்புணர்வைக் கவனித் தார்.

''உங்களுக்குத் தெரியாதா சார்? அந்த ஆள் எப்படியாவது தப்பிச்சுக்குவான்.''

''அவன் தப்பிக்கிறது அப்பறம் நடக் கட்டும்.... நீ கம்ப்ளெய்ண்ட் கொடு. ஆர் யூ அஃப்ரய்ட்?'

''இல்லே. நான் பயப்படலே. சொல்லப் போனா இப்பத்தான் பயம் தெளிஞ்சுருக்கு. தாக்குதல்னா என்னன்னு அ வ னு ங்க செமத்தியாப் புரியவச்சுட்டாங்க.''

''அப்பறம் வேற எதுக்குத் தயங்கறே?''

''தயங்கலே சார். நிச்சயத்துக்கு வந்துட் டேன். நான் எடுத்துக்கிட்ட காரியம் முடியறது தான் என் நோக்கம். அவங்க என்னை அடிச் சாக்கூட அடிக்கட்டும். அது இர்ரெலவண்ட். உண்மை வெளியே வரணும்.''

''இது ஒரு அனுகூலமான பாய்ண்ட் ஆச்சே. ஒய் டு யூ லீவ் இட்?''

''உண்மையை நேர்மையான வழியி லேயே வெளியே கொண்டாரணும்னு தோணுது.''

வக்கீல் அவனைப் புரிந்து கொள்ள முயன் றார்.

''இப்படி எனக்கு நடந்த தாக்குதலைச் சாக்கா வச்சு வேண்டாம்.''

''அவன் மேலே ஒனக்குக் கோபமில் லியா?''

''இல்லே... அவன் என்னைப் பார்த்து பயப்படறான்னு புரியறப்போ ஏன் கோபம் வரணும்?'' வக்கீல் அதை நம்ப முடியாதவர் போல் பார்த்தார்.

''இட்ஸ் எ பிட் புக்கிஷ்.''

''புக்கிஷா இருக்கக் கூடாதா சார்?''

கௌதமின் கேள்வி ஏதோ அடிப்படை சுதந்திரம் பற்றியது போல் நெருடியது. முகத் திலிருந்த நேர்மை அவன் குதர்க்கம் பேச வில்லை என்று வெளிப்படுத்திற்று.

''இருக்கலாம்: ஆனா அதுக்கு மோச மான விலை குடுக்கணும்.'' வக்கீல் பளிச் சென்று சொன்னார்.

விலை, சம்பந்தப்பட்ட தனி நபர் நிர்ண யிப்பது! எப்படி வாழ்வதற்கும் ஒரு விலை கொடுத்தாக வேண்டும். அது மோசமா மோசமில்லையா என்பது ஒப்பீடுகளுக் குரியது. விவாதத்திற்குரியது. வாழ்க்கைக்கு அல்லவென்று அவன் நினைத்தான்.

கௌதம் வக்கீலிடம் விவாதம் விரும்ப வில்லை. செய்தால் ஒரு பலனுமில்லை.

வையவன்

இன்னும் அதி மோசமான கற்றுக்குட்டி என்று நினைப்பார். கால விரயம்.

"இருக்கட்டுமே சார்! இந்த மாதிரி கொடுமைகளுக்கு யாராவது ஒருத்தர் விலை கொடுத்துத்தானே ஆகணும்." அவன் பதில் மழுப்பலாக இருந்தது. ஆனால் தீர்மானம் உறுதியானது என்று வக்கீல் புரிந்து கொண்டார்.

இழுக்கிற இழுப்புக்கு வரும் கட்சிக்காரன் இவனில்லை. அதுவும் அவருக்குப் புரிந்தது.

"ஒன்னைப் பார்த்தா பரிதாபமா இருக்குப்பா."

கௌதம் சிறிதும் பாதிக்கப்படாமல் அதைக் கேட்டுக் கொண்டான்.

"யூ கான்ட் சேஞ்ச் த சொஸைட்டி."

"அது என் நோக்கமில்லே சார்."

"அண்ட் யூ கான்ட் ஃபைட் த சொஸைட்டி."

"அதுவும் என்னுடைய நோக்கமில்லே. சார்! என் வழியிலே ஒரு தனி மனுஷனா நான் வாழ விரும்பறேன்."

"ஒரு தனி நபர் அவனது சமகாலத்தின் வீழ்ச்சியைத்தான் எடுத்துச் சொல்ல முடியும். வேற எதுவும் பண்ண முடியாது" என்று வக்கீல் ஆங்கிலத்தில் சொன்னார்.

அவன் ஒன்றும் சொல்லவில்லை.

"காலத்தோட நாமும் ஓட வேண்டியது தான்."

அதற்கும் கௌதம் அமைதியாயிருந்தான். தான் பேசியது அறிவுரையாகி விட்ட மாதிரி வக்கீல் உணர்ந்தார். எதிரொலியற்ற அவன் நிசப்தம் அதை உணர்த்திற்று.

"ஆல்ரைட்... நீ நாளைக்கு ஆதியைப் பார்க்க மறுபடியும் ஜெயிலுக்குப் போகலாம்னு சொன்னே?"

"நாளைக்கு மறு நாள் வர்றேன் சார்."

"ஒரு கம்ப்ளெயிண்ட் கொடுத்திருந்தா அவன் மறுபடியும் வேற அஸால்ட்டுக்கு ட்ரை பண்ண மாட்டான்... ம்ம்ம்... சரி... பரவால்லே... ஆனா இனிமே கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்துக்கோ."

"சரி சார்."

"என்ன சிரிக்கறே? இளங்கன்று பயமறியாதும்பாங்க... ரொம்ப தில்தான் ஒனக்கு.... ம்ம்" என்று வாட்ச்சைப்பார்த்தார். "மாப்பிள்ளை ஊர்வலம் கௌம்பியிருக்கும். வரட்டுமா?" என்றார்.



''ரொம்ப நன்றி சார்!''

''ஐய.... இதுவேறயா?'' என்று அவன் தோளைத் தட்டி விட்டு வக்கீல் விடை பெற்றார்.

அடுத்த நாளும் ஆஸ்பத்திரியில் படுத்திருப்பது சலிப்பாக இருந்தது. டாக்டர் வந்ததும் அவர் ஆட்சேபித்தும் கேளாமல் டிஸ்சார்ஜ் வாங்கிக் கொண்டு புறப்பட்டான். சைக்கிள் இல்லை. நடக்க வேண்டியிருந்தது. கௌதம் பலவீனமாக உணர்ந்தான்.

வழியில் தான் போலீஸ் ஸ்டேஷன். சைக்கிள் அங்குதான் இருக்கும். மெதுவாக நடந்து போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனான். அவன் சைக்கிள் பூட்டப்பட்டு வெளியே நின்றிருந்தது.

அவன் படிக்கட்டு ஏறும் போதே இன்ஸ்பெக்டர் இருதயராஜ் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான்.

''வா கௌதம்! என்ன டிஸ்சார்ஜ் ஆயிட்டியா?''

''ஆயிட்டேன் சார். ஆஸ்பத்திரி சலிப்பா இருக்கு...''

''உட்கார்.'' இன்ஸ்பெக்டர் எதிரே இருந்த நாற்காலியைக் காட்டினார்.

ஸ்டேஷனுக்குள் தன் மரியாதை மாறியிருப்பதை உணர்ந்து கௌதம் உட்கார்ந்தான்.

''காப்பி சாப்பிடறியா?''

''வேண்டாம் சார்!''

''சாப்பிடலாம்... ஐ ஃபீல் லைக். கான்ஸ்டபிள். அதோ வெளில நிக்கறவனை ரெண்டு காப்பி வாங்கி வரச் சொல்லு'' என்று உத்தரவிட்டு பாண்ட் பாக்கெட்டிலிருந்து பர்ஸை எடுத்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை உருவி நீட்டினார். அதை வாங்கிக் கொண்டு கான்ஸ்டபிள் வெளியே போனார்.

ஸ்டேஷனில் ரைட்டர் ஒரு மூலையில் உட்கார்ந்து என்னவோ எழுதிக்கொண்டிருந்தார். வேறு எவரும் ஸ்டேஷனில் இல்லை.

''ராத்திரி வக்கீல் ஒரு கல்யாணத்துக்கு வந்திருந்தாரே!''

''ஆமா ஸார்... வந்து பார்த்துட்டுப் போனார்.''

இன்ஸ்பெக்டர் அவனைக் கூர்ந்து பார்த்தார். அவர் மேலும் எதையோ எதிர் பார்க்கிறார். புரிந்தது. கௌதம் எதையும் சொல்ல விரும்பவில்லை.

''என்ன விஷயமா வந்திருக்கே?''

''சைக்கிள் எடுத்துட்டுப் போலாம்னு வந்தேன்.''

''கேஸ் பதிவாகியிருக்கு. கேஸ் முடிஞ்சப்பறம் தான் சைக்கிள் ஒனக்குக் கெடைக்கும்.'' இன்ஸ்பெக்டர் அழுத்தலாகச் சொன்னார்.

''நான் தான் கம்ப்ளயின்ட் தரலியே சார்.''

''டிரைவர் சின்னக்கண்ணு குடுத்திருக்காரு.''

''என்னன்னு?''

''அது ஒனக்குத் தேவையில்லே.''

கௌதம் ஒரு வரம்புக்கு வெளியே தள்ளப் பட்டதை உணர்ந்தான்.

''எதுவா இருந்தாலும் சரி. தாக்கப்பட்டது நான். என் சைக்கிள் இல்லே.''

''அது உன் சைக்கிள்னு போலீஸ் ஸ்டேஷனுக்கு எப்படித் தெரியும்?''

போலீஸ் அதிகாரம் என்னவென்று தனக்குப் புரியவைக்கப்படுவதாக கௌதம் நினைத்தான்.

''நீயும் ஒரு சைக்கிளும் நடு ரோட்டிலே விழுந்திருக்கீங்க. யாரோ பார்த்துட்டு ஒன்னை ஆஸ்பத்திரிலே சேத்தறாங்க. அது உன் சைக்கிள் என்று சட்டபூர்வமாகத் தெரியற வரைக்கும் போலீஸ் கஸ்டடியிலேதான் இருக்கணும்.''

கௌதமுக்குச் சூடேறிற்று.

''ஆல் ரைட்.... நீங்களே வச்சிருங்க'' என்று முகத்திலடித்தாற் போல் சொல்ல நினைத்தான். இங்கே கோபம் அர்த்தமற்றது.

இன்ஸ்பெக்டருக்குத் தான் புகார் கொடுக்க மறுத்தது பிடிக்கவில்லை. அதற்கு இது எதிரொலியோ?

ஒருவன் உயிரோடு எரிக்கப்பட்டதற்கு இவர்கள் நிரபராதியைக் குற்றம் சாட்டுவார்கள். தாக்கப்பட்டதைப் புகார் தர மறுத்தால் சட்டம் பேசுவார்கள்.

---

## சமயோசிதம்



ஒருமுறை கலைக் கல்லூரி விழாவில் கருணாநிதி பேசும் போது கல்லூரி மாணவர்கள் காகித அம்பு செய்து பறக்க விட்டார்கள். கலைஞர் அமைதியாக, ''கட்டுங்கடங்காத ஆர்வத்தோடும் எழுச்சியோடும் நீங்கள் இந்த விழாவைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள். இங்கே வந்து என் மேல் விழுகின்ற காகித விமானங்களைப் பார்க்கின்ற போது, 'பரவாயில்லை நமது நண்பர்கள் உண்மையான விமானங்களை இப்போது செய்ய முடியா விட்டாலும் வருங்காலத்தில் தமிழகத்தில் விஞ்ஞான யுகத்தைப் படைக்கப் போகிறார்கள்' என்று நம்புகிறேன்'' என்று அழகாகப் பேசி, அனைவரையும் சிரிக்க வைத்துக் கரவொலியையும் பெற்றார்!

— அ. முஸ்தபா.

தனிமனிதராக இவர் என்ன வானாலும் இந்த ஆசனம் இவருக்கு அதிகார உணர்வைத் தவிர வேறு என்ன தரமுடியும்?

''ரைட் சார்... அப்போ நான் பொறப்படறேன்'' அவன் எழ முயற்சி செய்தான்.

''காப்பி சொல்லியிருக்கனே.''

கௌதம் உட்கார்ந்தான்.

''டிபார்ட்மெண்டோட விதிகள் முக்கியமானது.''

''.......'' அவர் சமாதானம் சொல்ல வருகிறார். குறுக்கிட வேண்டியதில்லை.

காப்பி வந்தது. குடித்துவிட்டு அவன் நன்றி சொல்லி எழுந்தான். இன்ஸ்பெக்டர் அவன் ஏதோ பேசுவான் என்று எதிர் பார்த்தார். அவன் மௌனம் அவருக்கு அதிருப்தியளித்தது. அதை அவர் தவறாகப் புரிந்து கொள்ள இடமிருக்கிறது. தெரியும். எனினும் அவனால் தவிர்க்க முடியவில்லை.

**வீ**டு திரும்பும் போது பாவடி வீதியிலும், பஜாரிலும் பரிச்சயமுகங்களில் ஒரு பிரகாசம் தெரிந்தது. ஒரு மதிப்பு வெளிப்பட்டது. பேசியவர்களின் தோரணையில் தான் வேறு யாரோவாக உயர்த்தப்பட்ட மரியாதை புலப்பட்டது. முதலில் அது மனசுக்கு இதமாய்த்தானிருந்தது. அதில் கிறங்கி விட வேண்டாம். தனக்கே தான் அன்னியமாகி விட வேண்டாம் என்ற எச்சரிக்கையும் எழுந்தது. சாதாரணமாகச் சிரித்துவிட்டு வீட்டிற்குப் போனான்.

சவுந்தரம்மாள் தான் துடித்து விட்டாள்.

''நீ ஏன் ஒண்டிமா வந்தே? யார் கிட்டயாவது சொல்லியனுப்பக் கூடாது? வண்டி எடுத்தாந்திருப்பேனே... இப்பக் கூடதோபாரு, சமைச்சு சாப்பாடு எடுத்துட்டு வரலாம்னு டிபன் காரியரை அட்டத்திலேர்ந்து எடுத்து அலம்பி வச்சேன்.''

அவன் சிரித்துக் கொண்டே சமாதானம் சொல்லி, அவள் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வரவிருந்தசாப்பாட்டைச்சாப்பிட்டுவிட்டுப் படுத்தான்.

உடம்பிலிருந்து வலி முற்றிலும் போகவில்லை. படுத்தவுடன் தூக்கம் வந்து விட்டது.

**நா**லு மணிக்கு இன்ஸ்பெக்டர் அவனை அழைப்பதாக ஒரு கான்ஸ்டபிள் வந்தார். சவுந்தரம்மாள் அவனை எழுப்பினாள்.

முகம் கழுவித் தலை வாரிக் கொண்டு கௌதம் கிளம்பினான்.

ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டர் உட்கார்ந்திருந்தார்.

''வா கௌதம்!''

அவர் நாற்காலி காட்டினார். உட்கார்ந்தான்.

''கான்ஸ்டபிள் லாக்கப்பிலிருந்து அந்த நாலு பேரையும் வெளியே கொண்டா!''



''இப்பல்லாம், இரயில்லே போறதுக்கே, பயமா இருக்குங்க...''

''ஆமாமா... எப்போ, எந்த இடத்துல, விபத்து நடக்குதுன்னு யாருக்குத் தெரியும்...?''

''அட அது இல்லீங்க, எப்ப, எந்த இடத்துல, டி. டி. ஆர். நுழைவாரோன்னு பயமா இருக்குதுங்க...!''

— காரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

நாலு பேர் வெளியே வந்து நின்றனர்.

''இவங்களைப்பாரு கௌதம்.''

பார்த்தான். அதில் ஒரு முகம் பூந்துறையில் டீ குடித்தபோது கடையில் உட்கார்ந்திருந்த முகம்.

''எதுக்கு சார் கூப்பிட்டு அனுப்பிச்சீங்க?''

''சொல்றேன். இவங்களை நல்லா டீடெய்லா பாரு.''

மீண்டும் பார்த்தான்.

''இவங்க தான் உன்னைத் தாக்கியவங்களா?''

அவன் பார்வையை இன்ஸ்பெக்டர் மீது திருப்பினான்.

''பட் ஐ ஹாவ் நாட் கிவென் எ கம்ப்ளைண்ட்!'' என்றான்.

''தேவையில்லே. எனக்கு வேண்டியது ஒரு தகவல். இவங்க தான் உன்னைத் தாக்கியவங்களா?''

கௌதமுக்குள் எதுவோ சிலிர்ப்புற்று விழித்தது. அதிகாரத்தின் முன் நிர்ப்பந்தமாகப் பணிய வேண்டியதில்லை என்ற எதிர்ப்புணர்வு அது. அவன் அதைக் கட்டுப்படுத்தினான்.

''தெரியாது சார்.''

''தெரியாதா? வாட் டு யூ மீன்?''

''அங்கே நல்ல இருட்டு. முகம் தெரியாத இருட்டு. நான் சைக்கிள்ளேருந்து விழுந்துட்டேன். கீழே விழுந்த பின்னாடி இருட்ல எந்த முகத்தைப் பார்க்க முடியும்?''

''நீ உண்மை சொல்லலே கௌதம்!''

''ஸாரி சார்! இதான் எனக்குத் தெரிஞ்ச உண்மை'' என்றான்.

(தொடரும்)

# அவரவர் கணக்கு

"பி.டபிள்யூ.டி — யில் சூப்பரிண்டண்டிங் இன்ஜினியராக இருக்கிறாரே சங்கரநாராயணன் அவரைப் பற்றி உன்னிடம் சொல்லி இருக்கிறேன், இல்லையா."

ஏதோ ஒரு கனமான விஷயத்துக்குக் கால்கோல் இடுவதுபோல் அழுத்தமாகப் பார்வையை வீசினார் வாசுதேவன்.

கம்ப்யூட்டர் வகுப்பிலிருந்து அப்போது தான் திரும்பி இருந்த விக்னேஷ், "ஓ... தெரியுமே. அவர் தானே உங்கள் பழைய பாஸ்" என்றான்.

"எக்ஸாக்ட்லி. ரொம்பவும் நல்ல மனிதர் அவர். கெட்டிக்காரர். சாக்கடைத் தொட்டியாகவும், பொட்டல் வெளியாகவும் கிடந்த இந்த இடத்தை, இப்படி ஹவுசிங் யூனிட்டாக கட்டிக் கொடுத்ததே, அவர்தான்."

"அப்படியா!"

"சிக்கனமாகவும், அதே சமயம் விஸ்தாரமாகவும் அவர் போட்ட பிளானைப் பார்த்துட்டு சீப் இன்ஜினியரே அசந்துட்டார், தெரியுமா."

"ஐ... ஸீ..."

"ஆனால், மனுஷனைப் பார்த்தால் அப்படித் தெரியாது. பதவிசா, பதுமை மாதிரி இருப்பார். அடக்கம்னா அப்படி ஓர் அடக்கம்...."

"அவுட்ஸ்டாண்டிங் பர்சனாலிடின்னு சொல்லுங்கோ."

"கரெக்ட். அவரை நீ அவசியம் பார்க்கணும், விக்னேஷ்..."

"பார்த்துடுவோம்."

"அவர் கை, ராசியான கை. ஆசீர்வாதம் வாங்கினால் உன் எதிர் காலம் சுபிட்சமாய் இருக்கும். அதுக்காகத்தான் இவ்வளவும் நான் சொல்ல வந்தேன். நீ, பி.இ. ஃபர்ஸ்ட் கிளாஸ் — டிஷ்டிங்ஷன் எடுத்துப் பாஸ் பண்ணி இருக்கிறதைக் கேள்விப்பட்டால் அவர் ரொம்ப சந்தோஷப்படுவார்."

"சரி, அப்பா. எப்போது அவரைப் பார்க்கலாம்?"

"நளைக்கு நான் ஆபீஸ்விட்டு வந்ததும், உடனே கிளம்பிடுவோம். தயாராய் இரு."

"ஆகட்டும், அப்பா."

விக்னேஷின் பி.இ. ரிசல்ட்டை கேள்விப்பட்டமாத்திரத்தில்,வாசுதேவனின் நினைவில் மின்னிய முதல் மனிதர் சங்கரநாராயணன்தான்.

காரணம் —

அவர், சிவில் இன்ஜினியர். விக்னேஷும் சிவில்தான்.

அவரிடம் போனால், வேலை வாய்ப்புக்கான யோசனைகளைச் சொல்வார். முடிந்தால் அவரேகூட விக்னேஷை வேலையில் சேர்த்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பெரிய பெரிய அதிகாரிகள், ரோட்டரி, லைன்ஸ் கிளப், காண்டிராக்டர்கள் இப்படி பல கோணங்களிலும் பரிச்சயமான புள்ளி ஆயிற்றே அவர்!

என்னதான் ராங்க், மெரிட் வந்தாலும், சிபாரிசு இல்லாமல் இந்தக் காலத்தில் என்னதான் நடக்கிறது? ஒரு சாதாரணக் கூலி வேலைக்குக் கூட, கார் போட்டுக் கொண்டு ஒரு எம்.எல்.ஏ வோ ஒரு கவுன் சிலரோ வர வேண்டியுள்ளதே!

இதை மனத்தில் கொண்டுதான், 'ஆசீர்வாதம்' என்ற சாக்கில், மகனின் ஜாதகத்தை அவரது காதில் போட்டு வைக்க நினைத்தார் வாசுதேவன்.

ஆனால் —

'வேலைக்காகப் பார்க்கப் போகிறோம்' என்றால், விக்னேஷ் தன்னை அற்பமாய் நினைக்கக் கூடும். ஆகவே தான் யதார்த்த நோக்கத்தில், 'பார்க்கப் போகலாம்' என்று சொல்லி இருந்தார், ஆணித்தரமான முஸ்தீபுகளுடன்.

மறுநாள்.

வழக்கம் போல் ஐந்தரைக்கெல்லாம் ஆபீஸ் விட்டு வரும் வாசுதேவன், ஆறு மணி ஆகியும் வரக்காணோம்.

ஏழு மணி அடிக்க, "ஏகப்பட்ட வேலை, ஆபீசில்" என்று வீட்டுக்குள் நுழைந்தார்.

அடுத்த நாளும் அப்படியே.

மூன்றாம் நாள்.

"இன்றுதான் சீக்கிரம் வந்துவிட்டீர்களே, அப்பா. சங்கரநாராயணனைப் பார்க்கப் போகலாமா?" என்றான், விக்னேஷ்.

"போகலாம்தான் ஆனால்..." முகவாயைக் காரணமில்லாமல் தடவிக் கொண்டார், வாசுதேவன்.

"ஏன்?" பிள்ளை, புரியாமல் விழித்தான்.

"அதாவது விக்னேஷ்... அது..."

"சும்மா சொல்லுங்கள், அப்பா."

"சங்கரநாராயணன் இன்னும் பதினைந்து நாள்தான் சர்வீசில் இருக்கப் போகிறார். வரும் முப்பதாம் தேதி ரிடையர் ஆகிறாராம்."

"அதனால்... அவரைப் பார்க்க வேண்டாமா?"

''வேண்டாமென்றுதான் நினைக்கிறேன்."

விக்னேஷ் ஏகத்தாளமாகச் சிரித்துச் சொன்னான். ''ஒருவர் சர்வீசில் இருந்தால் தான் நல்லவர், கைராசிக்காரர். இல்லா விட்டால் அவர் செல்லாக்காசு என்கிறீர் கள். இல்லையா அப்பா?''

''ஹி..... ஹி.... அப்படி இல்லை. ரிடைய ராகும் மனிதரை எதுக்கு அனாவசியமாகச் சிரமப்படுத்தணும்னு பார்த்தேன்....'' மழுப் பினார் வாசுதேவன்.

''நோ. அவரை நீங்கள் பிசினஸ் லைக் காகத்தான் பார்க்க நினைத்தீர்களே தவிர, ஃபிரண்ட்லியாக இல்லை'...'' குற்றம் சாட் டினான் பிள்ளை.

வாசுதேவன் அவனைக் கூர்மையாகப் பார்த்தார். ''இருக்கட்டுமே... அதில் என்ன தப்பு?''

''அதெப்படிங்க....'' பூஜை அறையி லிருந்து வெளியில் வந்தாள் சிவகாமி. ''எந்த மனுஷாளையும், சினேகமாய்ப் பார்க் கிறதுதான் முதல் மரியாதை. அப்போது தான் ஆத்மதிருப்தியும், நிஜமான சந்தோஷ மும் உண்டாகும்.''

''ஓஹோ... அம்மாவும், பிள்ளையும் சேர்ந்து எனக்குப் புத்தி சொல்ல வந்துட் டீங்களா?''

''உங்களுக்கு புத்தி சொல்லும் தகுதி எங் களுக்கு இல்லை. எனக்குத் தெரிந்ததைச்

தமிழினியன்

சொன்னேன். வியாபாரத்திலே சினேகமாய் இருந்தால் அது சாமர்த்தியம். ஆனால், சினேகத்தை வியாபாரமாக்கினால் அது பாவம்....''

''பலே... பலே...'' வாய் விட்டுச் சிரித் தார், வாசுதேவன். நன்னாப் பேசறீயே... இதென்ன வசனம்? டிவி நாடகமா... சினிமாவா? இங்கே பாரும்மா சிவகாமி... இது கலிகாலம். இரண்டு ரூபாய் வரும்படி வரும் என்றால்தான் ஒரு ரூபாய் செலவு பண்ணணும்... தெரியுமா?'' சட்டைப் பொத் தானைக் கழற்றிக் கொண்டே அறைக்குள் நுழைந்தார், வாசுதேவன்.

அம்மாவும், பிள்ளையும் மௌனமாய் பின் வாங்கினார்கள்.

ஆனால் —

ஆச்சரியம் நிகழ்ந்தது. அடுத்த ஆறாம் நாள்.

அன்று, வீட்டுக்குள் நுழைந்த வாசு தேவன் பரபரப்புடன் காணப்பட்டார்.

''விக்னேஷ்... விக்னேஷ்....''



குரலிலும், முகத்திலும் மகிழ்ச்சியின் முத்திரை.

''என்ன அப்பா... ஏதாவது லாட்டரிச் சீட்டா?'' ஐந்தரை மணி இந்திப் படத்தை அப்போதுதான் டீவியில் திறந்த விக்னேஷ், கிண்டலாய்க் கேட்டான்.

''அதில்லை, விக்னேஷ். அம்மாவும், நீயும் சங்கரநாராயணனைப் பற்றி அன்றைக்குச் சொன்னீர்களே.... அதை நானும் கொஞ்சம் யோசித்தேன். நீங்கள் சொன்னது வாஸ்தவம்தான். சர்விசிலே இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவருக்குள்ள குணமும், திறமையும் அவரிடம்தானே இருக்கும்.''

விக்னேஷுக்கு ஆச்சரியம் தாளவில்லை. ''அப்பா.... என்ன இவ்வளவு சீக்கிரம் பிளேட்டை மாற்றிவிட்டீர்கள்!''

''டேய்... கிண்டல் பண்ணாதே. அவரது பர்சனாலிடி ஒரு பக்கம் இருந்தாலும், நான் அவரிடம் சபார்டினேட்டா கொஞ்சநாள் உத்தியோகம் பார்த்திருக்கிறேன். அந்த விசுவாசத்துக்காவது நான் அவரைப் பார்க்க வேண்டும். அதுதான் நியாயம். அம்மா சொன்ன ஆத்மதிருப்தி அப்போதுதான் எனக்கு உண்டாகும்!'' அற்புதமாக வார்த்தைகளைக் கொட்டினார், வாசுதேவன்.

''பரவாயில்லையே. நீங்கள் கூட நியாயம் தெரிந்து பேசுகிறீங்களே....'' என்று பாராட்டினாள், சிவகாமி.

அடுத்த பதினைந்தாவது நிமிடம் — அப்பாவும், பிள்ளையும் சட்டை மாற்றிக் கொண்டு சங்கரநாராயணனைப் பார்க்கப் புறப்பட்டார்கள்.

வாசுதேவன் எப்படி மாறினார்?

ஓய்வு பெறப் போகும் சங்கரநாராயணனை, மாநகரில் உள்ள தனியார் கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி ஒன்று 'டெக்னிகல் அட்வைசராக' நியமனம் செய்துள்ளது.

அகிலம் முழுவதும் பிரபலமான மிகப் பெரிய கம்பெனி அது. பிரஸ்டீஜ் போஸ்ட். மனசு வைத்தால் யாருக்கும் வேலை போட்டுக் கொடுக்கலாம்.

அதை, இன்று காலையில்தான் காது குளிரக் கேள்விப்பட்டிருந்தார், வாசுதேவன். இந்த விஷயம் அம்மாவுக்கும் பிள்ளைக்கும் தெரிந்திருக்க முடியாதே!




- இந்துமதியின் இயற்பெயர் சரஸ்வதி.
- கார்டூனிஸ்ட் மதனின் இயற்பெயர் கோவிந்த்குமார்.
- சுரதாவின் இயற்பெயர் வரதராஜன்.
- மணியம் செல்வனின் இயற்பெயர் லோகநாதன்.
- மீராவின் இயற்பெயர் மீ. ராஜேந்திரன்.
- மாலனின் இயற்பெயர் நாராயணன்.
- புலவர் கீரனின் இயற்பெயர் வைத்யநாதன்.
- தமிழன்பனின் இயற்பெயர் ஜகதீசன்.
- முரசொலி மாறனின் இயற்பெயர் தியாகராஜசுந்தரம்.
- நெடுஞ்செழியனின் இயற்பெயர் நாராயணசாமி.
- லேனா தமிழ்வாணனின் இயற்பெயர் லட்சுமணன்.
- 'அரஸ்'ஸின் இயற்பெயர் திருநாவுக்கரசு.
- அசோகமித்திரனின் இயற்பெயர் தியாகராஜன்.
- வாஸந்தியின் இயற்பெயர் பங்கஜம்.
- புஷ்பா தங்கதுரையின் இயற்பெயர் வேணுகோபாலன்.
- மாருதியின் இயற்பெயர் ரங்கநாதன்.
- வல்லிக் கண்ணனின் இயற்பெயர் கிருஷ்ணசுவாமி.
- குண்டு கல்யாணத்தின் இயற்பெயர் லட்சுமி நாராயணன்.
- மகரிஷியின் இயற்பெயர் பாலசுப்ரமணியன்.
- 'சுரோ'வின் இயற்பெயர் போஸ்.
- தமிழ்க்குடிமகனின் இயற்பெயர் சாத்தையா.
- சுப்புடுவின் இயற்பெயர் சுப்பிரமணியன்.
- விஜயகாந்தின் இயற்பெயர் விஜயராஜ்.
- கார்த்திக்கின் இயற்பெயர் முரளி.
- ராஜேஷ்குமாரின் இயற்பெயர் ராஜகோபால்.
- ஆவடி அருணாவின் இயற்பெயர் அருணாசலம்.
- அமைச்சர் அன்பழகனின் இயற்பெயர் ராமய்யா.
- டாக்டர். மா. நன்னனின் இயற்பெயர் திருஞானசம்பந்தன்.

தொகுப்பு: மௌனி.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் விவேகானந்தா கல்வி நிலையத்தில் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள எனது முகவரிக்கு தபால் முறைப் பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும் விண்ணப்ப மனுவையும் உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு,
எஸ். செல்வ கணேசன்

WRITE PIN CODE IN ADDRESS

15 INDIA

SULUR

விவேகானந்தா கல்வி நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986. 9. மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

*The above advt. is the Copy right property of M/s. Naga Ads. Reproduction under any manner is punishable under the Indian Copy right act.*

Colour photo : M. Parwathisam

# Gokulam



## A TREAT THAT NO CHILD SHOULD MISS

**In the June Issue :**

* **The Wooden Doll's Mystery** — *an exciting story.*
* **Rukmini Swayamwaram** — *a thrilling play to read aloud and enact.*
* **Saint Thyagaraja** — *a sixteen page picture story in colour*
* **Hooks and Baits** — *a lovely indoor game*

*Plus : Puzzles, Poems, Riddles, Things to Make and Do.....*

96 pages for Just Rs. 3/-

GIVE YOUR CHILDREN THE BEST GIVE THEM

**Gokulam**

For agency and subscription contact :
Gokulam, Guindy, Madras - 600 032
Telephones : 434157, 434190

Annual Subscription : Rs. 36.00 (India)
Overseas : Rs. 270.00 (Air mail)
: Rs. 120.00 (Sea mail)

# இளைஞர்களுக்குக் கொடுத்த ஊட்டச்சத்து!

* 'வில்லனாக மாறிய பல்லவன்' என்ற தலையங்கம் படித்தேன். பல்லவன் ஊழியர்களும் நிர்வாகத்தினரும் எப்படி நடந்து கொண்டிருந்தால் பொது மக்களுக்குப் பிரச்னை தரக்கூடிய சூழ்நிலைகளைத் தவிர்த்திருக்கலாம் என்பதை மிக அழகாகச் சுட்டிக் காட்டியிருந்தீர்கள். பாராட்டுக்கள்.

சென்னை — 83, வே. க. ஸ்ரீதரன்.

* ''போராடுவதில் தவறில்லை; ஆனால், அதற்கு உரிய முறைகள் இருக்கின்றன. முதலில் கோரிக்கை, பிறகு எச்சரிக்கை, அப்புறம் முன்னறிவிப்புடன் கூடிய வேலை நிறுத்தம்,'' — என்ற தங்களின் தலையங்க வரிகள் போராடும் ஊழியர்கள் அனைவரும் மனத்தில் கொள்ள வேண்டிய வரிகள்.

சேலம், பூங்குழலி.

* ''அட்டையில் கொட்டிய சிற்றருவியின் படத்தைப் பார்த்த போது அதில் குளிக்க வேண்டும் போல் இருந்தது. அத்தனை தத்ரூபம்!

தக்கோலம், அ. முஸ்தபா.

* **Land Scaping** கிற்கு உள்ளே வந்த கட்டுரையில், மஞ்சுளா ராவ் பல வார்த்தைகளில் — பல வரிகளில் கூறிய விளக்கத்தை, அட்டைப் படத்தின் மூலம் மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டீர்களே! அட்டைப் படம் மிக மிக அருமை.

சென்னை — 10, எஸ். தர்மா.

* 'கல்கியின் விமர்சனமும் கலைஞரின் ரசனையும்!' என்ற தங்கள் கட்டுரையைப் படித்தேன். எவருக்கும் அஞ்சாது உண்மையை எடுத்துரைக்கும் — உண்மைக்காக வாதாடும் — தங்கள் செயலை ஒரு சக பத்திரிகையாளன் என்ற முறையில் மிகவும் பாராட்டுகிறேன்.

சென்னை — 88, தி. க. சிவசங்கரன்.

* ராஜாஜி — நரசிம்மன் அரசியல் உறவு பற்றி இன்னொரு முக்கியமான வரலாற்று உண்மையையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1962 பொதுத் தேர்தலில் கே. ஆர். நரசிம்மன் காங்கிரஸ் வேட்பாளராக கிருஷ்ணகிரியில் போட்டியிட்டார். அப்போது ராஜாஜி தமது சுதந்திரக் கட்சியின் மூலம் காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரத்தைத் தீவிரமாகக் கொண்டிருந்தார். அப்போது ராஜாஜி என்ன செய்தார் தெரியுமா? கிருஷ்ணகிரித் தொகுதியில் மகனுக்கு எதிராகப் பிரசாரம் செய்தார். இது சரித்திரம். இப்படிப்பட்ட சரித்திரத்தை இந்தக் கால தேவிலால்களிடமும் கருணாநிதிகளிடமும் எதிர்பார்க்க முடியுமா என்பதுதான் கேள்வி.

சென்னை — 5, எஸ். வாணி சங்கர்.

* தாங்கள் வெளியிட்ட எட்டு இலவச இணைப்புகளும், எக்காலத்திற்கும், எல்லாத் தரப்பினருக்கும் பயனுள்ளதாக அமைந்த பொக்கிஷங்கள்.

திருநெல்வேலி — 2, பாளை. உதயம்.

* 'வெற்றிகளைக் குவியுங்கள்!' — இலவச இணைப்பு, எங்களைப் போன்ற எண்ணற்ற இளைஞர்களுக்கு நிறைய ஊட்டச்சத்தை அளித்தது.

கடலூர் — 1, சாந்தன்.

* 'உழவாரம் அழைக்கிறது' படித்தேன். அவர்கள் ஆற்றி வரும் தொண்டினைப் படிக்கும் பலர், அவரவர் ஊரில் உள்ள கோவில்களில் இதுபோன்ற பணிகளைச் செய்ய இக் கட்டுரை தூண்டுதலாக அமையும் என்பது திண்ணம்.

மதுரை, இல. அமுதன்.

* ஒரே குடும்பத்தில் உள்ள மூன்று விதவைகளின் வெவ்வேறு உணர்ச்சிப் போராட்டங்களை படித்து விட்டுப் பொங்கி வரும் அழுகையைக் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டேன். மனச் சுத்தத்தைப் பார்க்காமல் மடி, ஆசாரம் என்று புற அழுக்கை மட்டும் பார்க்கும் அந்த 'மன்னி' போன்ற மனுஷிகள் இன்னும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்று நினைக்கும் போது, சமூகத்தில், விதவைகளுக்கு விடிவு பிறக்க இன்னும் பல தலைமுறைகள் ஆகும் போலிருக்கிறதே என்று வருந்தாமல் இருக்க முடியவில்லை.

சிறுமுகை, ஏ. ஜெகதாம்பாள்.

* வண்ணதாசனின் 'ஆலங்கட்டி மழை' சிறுகதை படித்தேன். கரைந்து நீராய் வழிகிற ஆலங்கட்டிகளின் சில்லிப்பு — மனத்தில் மட்டுமின்றி, உடலிலும்! மனத்தில் இவ்வளவு வலியை, நிறைவை, மகிழ்ச்சியை, குளிரை — எல்லா உணர்வுகளின் அடர்த்தியையும் ஒரு கதை ஏற்படுத்தவும் கூடுமோ? வண்ணதாசனின் கலைத்திறன் நிரூபணம் ஆகியிருக்கிறது!

வேலூர், கமலாலயன்.

* அபர்ணா நாயுடு எழுதிய, 'முடிவு.... அவள் கையில்...' சிறுகதை பெண்களின் தனித்துவத்தை எடுத்துக் காட்டியதோடு, 'பெண்மைக்கு நிகர் பெண்மையே' என்பதை 'லோசனி' பாத்திரம் நிரூபித்து விட்டது!

முத்துப்பேட்டை, தஞ்சைத் தாணியன்.

* 'உலகம் பிறந்தது எனக்காக' — சினிமா விமர்சனம் டு லேட்! இது போன்ற படங்களுக்கு வந்த உடனேயே விமர்சனம் எழுதினீர்களேயானால் காசையும், காலத்தையும் பயனுள்ள வகையில் செயல்படுத்த எங்களுக்கு வசதியாக இருக்கும்.

மதுரை — 1, பிரபாகர் ப்ரியன்.

* ''சிக்கலான பிரச்னையை விடுவிக்க, எல்லா மதத் தலைவர்களும் மடங்களின் தலைவர்களும் அரசுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டுமே தவிர, பிரச்னையை மேலும் சிக்கலாக்கக் கூடாது'' என்ற தாராவின் பதில், கல்கி என்றுமே நடுநிலையான பத்திரிகை என்பதற்கு ஓர் உதாரணம்.

தக்கோலம், ஆ. புகாரி.



# அதிர்ஷ்ட தேவதை

## 9

மாலு, டெலிபோனை வைத்தவள், பதற்றத்துடன் ஓடி வந்து அருகே நின்ற ரங்கனைப் பார்த்தாள்.

''என்ன ரங்கா, ஏன் இப்படிப் பதறிப் போய் நிக்கறே?''

''மாலு அம்மா, மாலு அம்மா...'' அவனுடைய தொண்டை கம்மியது. மனத்தில் உதித்த வார்த்தைகள் நாவில் புரளவில்லை.

மாலு தன்னுடைய இருக்கைக்கு வந்தாள். ரங்கன் பின் தொடர்ந்தான்.

மாலு அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

அவன் பசியில் துடிக்கும் சிறு பையனைப் போல் அவளைப் பார்த்து ஏங்கினான்.

''ரங்கா, உனக்கு என்னாச்சு? ஏன், இப்படி, எல்லாமே அழிஞ்சுட்ட மாதிரி பார்க்கிறே?''

''மாலு அம்மா... நான் உங்க காலைப் புடிச்சுக் கேக்கறேன்... உங்ககிட்ட இப்பப் பேசினது ரமணி சார் தானே?''

மாலு பதில் கூறவில்லை. சிரித்தாள்.

''சிரிக்காதீங்க, மாலு அம்மா.''

''யார்ட்டேயும் சொல்லப்படாது.''

''சத்தியமாச் சொல்ல மாட்டேன். எங்கிருந்து பேசினார், மாலு அம்மா?''

''தெரியலே... பாதி பேசறப்ப கட் ஆயிடுச்சு. ஒரு வேளை மறுபடியும் போன் பண்ணினாலும் பண்ணுவாரு.''

''அப்படிப் பண்ணினார்னா, எங்கிட்ட சொல்லுங்கம்மா, நானும் ஒரு விஷயம் பேசணும்.''

''முடிஞ்சாப் பார்க்கறேன். நீ இப்ப உன் இடத்துக்குப் போ.''

ஏழெட்டு நிமிடங்களுக்குப் பிறகு, முதலாளி ரமேஷ் சாண்டில்யாவின் பியூன் — குதிரை ஆலோசகர், — அகவருனி — வெங்கி, மாலு அருகே வந்தான். முதலாளி இன்னும் ஆபீசுக்கு வரவில்லை. இவன் ஏன் அவளைப் பார்க்க வருகிறான்?

''போன் வந்திருக்கு, மாலு.''

''இதோ.''

ஏன் ரமேஷின் அறையிலுள்ள போனில் அழைப்பு வருகிறது?

''மாலு... நான்தான். போன் கட்டாயிடுத்து... யாரும் பக்கத்தில் இல்லையே?''

''இல்லே... பாஸ் இன்னும் வரலே!''

''நீ என்ன செய்யறே...?'' ஒரு இழுப்பு.

''சொல்லுங்க.''

''ராத்திரி ஏர்க்காடு எக்ஸ்பிரஸ்லே ஏறி சேலம் வர்றே... கூட ரங்கனையும் அழைச்



கூக்கிட்டு வர்றே."

"என்ன விஷயம்?"

"சேலத்துக்கு வந்ததும் தெரியும்."

"அங்கே நாம ரிஜிஸ்தர் மாரேஜ் பண்ணிக்கப் போறோமா? சாட்சிக் கையெழுத்துப் போட ரங்கன் வரணுமா?"

"விளையாடாதே மாலு... இது ரொம்ப சீரியஸ். ரங்கன் என்ன கேட்டாலும் தெரியாதுன்னு சொல்லிடு. அவன் சேலம் வர்ற விஷயம் அவன் பெண்டாட்டிக்குக் கூடத் தெரியக் கூடாதுன்னு எச்சரித்து வை. நான் நாளைக்கு ஸ்டேஷன்லே மீட் பண்றேன்."

மாலு மேலும் பேச முனைவதற்குள் ரமணி சேலத்தில் போனை வைத்து விட்டான்.

அரைமணி நேரத்துக்கு ஒரு முறை ரங்கன் அவள் அருகே வந்து ஏக்கமும் ஆர்வமுமாக நின்றான். தான் வேலையில் மூழ்கி விட்டது போல மாலு பாசாங்கு செய்தாள். அவள் ரமேஷின் அறைக்குச் சென்று போனில் பேசியது ரங்கனுக்குத் தெரிய வரவில்லை என்று ஊர்ஜிதமாயிற்று.

பன்னிரண்டே முக்காலுக்கு ரங்கன் ஏழாவது தடவையாக மாலு அருகே வந்து நின்றான். அவள் முதலாளியின் அறைக்குள் பிரவேசித்து, ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு வெளியே வந்ததை அவன் அறிவான். இதற்கான காரணத்தை அவன் விசாரிக்கவில்லை. மாலுவும் சரி, ரமணி சாரும் சரி, அடிக்கடி முதலாளியின் அறைக்கு, அவர் இருக்கிற போதும் இல்லாத போதும், ஆபீஸ் சம்பந்தமான காரியங்களைக் கவனிக்கவோ, ஃபைல்களை எடுக்கவோ, பார்க்கவோ செல்லுகிறவர்கள். இன்றும் மாலு அப்படித்தான் செய்திருக்கிறாள்.

"ரங்கா!"

"என்ன மாலு அம்மா?" திடீரென ஒரு நம்பிக்கை தளிர் விட்டது.

"என் வீடு தெரியும், இல்லையா?"

"தெரியும்."

"ராத்திரி ஒம்பது மணிக்கு நீ என் வீட்டுக்கு வர்றே."

"எதுக்கும்மா?"

"இப்ப ஒண்ணும் சொல்ல மாட்டேன். நீ வந்தே ஆகணும்."

"சரிம்மா."

"முதலாளி ஒரு ஸ்பெஷல் வேலை போட்டிருக்கார். அவரோட நான் போன்ல பேசினேன். ரமணி ஆபீசுக்கு வரலியா, அதனாலே அந்த வேலையை நான் செஞ்சு முடிக்கணும்னார். உதவிக்கு உன்னை எடுத்துக்கச் சொன்னார்."

"சரிம்மா!"

பி.வி.ஆர்.



"என்ன அதிசயம்! இப்பல்லாம் உன் மாமியாரையும் தவறாமல் சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போறயாமே?"

"குழந்தை பிறந்திடுச்சே! அது அழுதா அவங்க வெளியே கொண்டு போய்ச் சமாதானம் செய்வாங்க. கதைவிட்டுப் போகாமல் படம் பார்க்கலாமே!"

— கரம்.

"இன்னொரு விஷயம்."

"சொல்லுங்க."

"நீயும் நானும் நாளைக்கு ஒரு நாள் லீவு போடறோம்."

"லீவா?"

"ஆபீஸ் வேலைதான். இருந்தாலும் லீவு போடச் சொல்லியிருக்கார் முதலாளி. உன் லீவு லெட்டரை நானே எழுதி வைக்கிறேன். நீ கையெழுத்து மட்டும் போடு."

ரங்கனுக்குத் தலைசுற்றியது.

இவள் என்ன சொல்லுகிறாள்? இப்படிப்பட்ட ஒரு நிர்ப்பந்தம் ஆபீசில் இந்த நான்கு ஆண்டுகளாக ஏற்பட்டதில்லை. ஆபீஸ் வேலை. ஆனால் அதைச் செய்து முடிக்க லீவ் போட வேண்டும். இது என்ன விசித்திரம்? அவனுடைய மண்டை மரமண்டை. ஒன்றும் புரியவில்லை.

அவன் நகர்ந்தான்.

"ரங்கா."

"என்ன மாலு அம்மா?"

"இதுபத்தி யார்கிட்டேயும் மூச்சுவிடக் கூடாது. ஏன், உன் மனைவி தனத்துக்குக் கூடத் தெரியக் கூடாது. தெரிஞ்சது, உன் வேலை போயிடும்."

ஏற்கெனவே லாட்டரிச் சீட்டு அவன் கையிலிருந்திருந்தால், மாலுவின் இந்த பயமுறுத்தலுக்கு அவன் பணிந்திருக்க மாட்டான். பணமே வராதோ என்கிற பயம் அவனைக் கவ்விக் கொண்டாகி விட்டது. என்ன செய்ய?

"சொல்ல மாட்டேன், மாலு அம்மா."

"ஒன்பது மணி! எதுக்கும் மாத்துச் சட்டை பாண்ட்டோட வா. தனம் கேட்டா ஆபீஸ் காரியமா வெளியூர் போறதாச் சொல்லிச் சமாளி."

ரங்கன் தலையை மட்டும் அசைத்து விட்டு மௌனமாகத் தன் இருக்கைக்குத் திரும்பினான்.

டைப்பிஸ்ட் சுகந்தி அவனுக்காகக் காத்திருந்தாள்.

"என்ன ரங்கா, பேசறதுக்கு ரமணி இல்லையேன்னு மாலு உன்கிட்ட பேசிட்டிருந்தாளா?"




## ரஷ்யாவில் நடக்கும் பெயர் மாற்றம்!

தெருக்களுக்கும் மாவட்டங்களுக்கும் ஆண்டாண்டுக் காலமாக வழங்கிவரும் பெயர்களையெல்லாம் மாற்றி, சமீப காலத்துப் பெரிய புள்ளிகளின் பெயர்களைப் புதிதாகச் சூட்டி வருகிறோம் நாம்! ஆனால் ரஷ்யாவில் நிலைமை தலைகீழ்!

ஸ்டாலின் காலத்தில் புராதன நகரங்களுடைய பெயர்கள் எல்லாம் மாற்றப்பட்டு, அவற்றுக்குக் கம்யூனிஸ்ட் தலைவர்களின் பெயர்கள் சூட்டப்பட்டன. உதாரணமாக செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கின் பெயர் 'லெனின்கிராட்' என்று மாற்றப்பட்டது. இப்போது அவ்வூர் மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, அப்பெயரை மீண்டும் செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் என்று மாற்றுவதில் தீவிரம் காட்டி வருகின்றனர். பல ஊர்களில் இத்தகைய மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

ஒரு மனிதனின் பெயரை மாற்ற நமக்கு எப்படி உரிமை கிடையாதோ, அவ்வாறே ஒரு நகரத்தின் பெயரை மாற்றவும் நமக்கு உரிமையில்லை என்கின்றனர் ரஷ்ய மக்கள்.

— நியூஸ்வீக்

ரங்கன் பதில் கூறாமல் மௌனமாய் உட்கார்ந்தான்.

''என்ன சொல்றா அவ?''

சுகந்தியை அவன் ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. அவனுக்குச் சாதுரியமாகப் பேசவோ, பொய் சொல்லவோ வராது. உண்மையை வெளியிடவும் முடியாத நிலை. ரங்கன் என்ன செய்வான்? சிலைபோல உட்கார்ந்திருந்தான்.

மாலை ஐந்தரை மணிக்கு ஆபீஸ் காலியாகியது. மயில்சாமி வருவதைக் கண்ட ரங்கன், அவனுடைய பார்வையிலிருந்து ஒதுங்கி, சுகந்தியின் பீரோவுக்கு அருகே நின்றான். மயில்சாமி அவனைக் கவனிக்காமல், முதலாளியின் அறையைப் பூட்டச் சென்றான்.

அவசர அவசரமாக மாடிப் படியில் இறங்கி நடந்த ரங்கன் சாலையின் பிளாட்பாரத்துக்கு வந்ததும் நின்றான். வீட்டுக்குச் சென்று, மாற்று உடைகளுடன் புறப்பட்டு மாலுவை ஒன்பது மணிக்குச் சந்திக்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தவன் இப்போது திடீரென மனம் மாறினான்.

வீட்டுக்குச் சென்றால், தனம் அவனைப் புரட்டிப் புரட்டி எடுப்பாள். லாட்டரிச் சீட்டை ஏன் கொண்டு வரவில்லை என்று அவன் மீது பாய்வாள். அவன் வெளியே செல்லுவதையும் தடுப்பாள். சரியாக ஒன்பது மணிக்கு அவன் மாலுவின் வீட்டில் இல்லை என்றால் என்னென்ன விபரீதங்கள் உண்டாகுமோ?

மனம் ரமணிக்குச் சென்றது. ரமணி சார் நல்லவர். அவருக்கு நிச்சயமாக லாட்டரியில் முதற் பரிசு விழுந்தது தெரிந்திருக்காது. தெரிந்திருந்தால் வெளியூர் புறப்படுவதை ஒத்திப் போட்டுவிட்டு, டிக்கெட்டுடன் அவனுடைய வீட்டுக்கு வந்திருப்பார்.

திடீரென்று ஒரு புதுவித நம்பிக்கையும் உண்டாகியது.

இது ஆபீஸ் வேலை இல்லை!

மாலு, ரமணியின் ஏற்பாடு காரணமாகத்தான் அவனை வரச் சொல்லியிருக்க வேண்டும். ரமணி சார்தான் அவளுடன் டெலிபோனில் பேசியிருக்கிறார். இதை அவளே சொல்லிவிட்டாள். இதுநாள் வரை மாலு ரங்கனை மனிதனாக மதித்துப் பேசியதில்லை. ஏளனம் செய்வதே அவளுடைய பொழுதுபோக்கு. அவனை நையாண்டி செய்வதில் ஒரு தனி உற்சாகம். இப்படிப்பட்ட பெண் அவனைத் தன் வீட்டுக்கு இரவு ஒன்பது மணிக்கு வரச் சொல்லுகிறாள் என்றால், என்ன அர்த்தம்? முதலாளி எப்படி ஒரு பெண்ணிடம் முக்கியமான வேலையை ஒப்படைப்பார்? உண்மையாகவே ஒரு முக்கியமான வேலை இருந்தால், ரமணி இல்லாத போது, 'நெய் ரோஸ்ட்' கிச்சாமியிடம்தானே ஒப்படைக்க வேண்டும்? உதவி செய்யப் போயும் போயும் ரங்கனையா முதலாளி தேர்ந்தெடுப்பார்? வெங்கி இருக்கிறானே? ஆபீஸ் வேலை என்றால் ஏன் லீவ்?

நிச்சயமாக இது ஆபீஸ் வேலை இல்லை. மாலு பொய் சொல்லுகிறாள்.

ரங்கன், தானே ஆச்சரியப்பட்டுப் போனான். அவனால் கூட, மனக் கொந்தளிப்புக்கிடையிலும், சுயமாகச் சிந்திக்க முடிகிறதே?

அவன் வீட்டுக்குச் செல்லவில்லை.

நிஜார் பாக்கெட்டில் ஐந்து ரூபாய் இருந்தது - இரண்டு பன் வாங்கி, விண்டு விண்டு போட்டுக் கொண்டான். உலர்ந்து போன துண்டுகள் லேசில் இறங்கவில்லை. ஒவ்வொரு துண்டையும் ஒரு வாய் தண்ணீரால் மூழ்கடித்துத் தொண்டையில் இறக்கினான். 'டீ'யைக் குடித்த பிறகுதான் ஆசுவாசம் ஏற்பட்டது.

தி. நகரில் வசிக்கும் மாலுவின் வீட்டை அடைந்த போது இரவு மணி எட்டே முக்கால்.

அடிபட்ட புலியைப் போல தனம் தனக்குத்தானே உறுமிக் கொண்டிருந்தாள். ஏன் அவளுடைய சோணிச் சோப்ளாங்கி இன்னும் ஆபீசிலிருந்து திரும்பவில்லை? எங்கே போய்விட்டான்? அந்தப் பாழாய்ப் போகிற ரமணி வீட்டுக்கு லாட்டரிச் சீட்டை வாங்கப் போய் விட்டானோ? டிக்கெட் இருந்தாலும் அவன் கொடுக்கவா போகிறான்? இந்தச் சோப்ளாங்கியின் தலையில் மிளகாய்தான் அரைத்து அனுப்பப் போகி

நான். முட்டாள்! யாரை நம்புவது யாரை நம்பக் கூடாது என்று கூட இந்த செக்கு மாட்டுக்குத் தெரியவில்லையே! அவளுடைய முட்டாள் புருஷன் இருபத்தைந்து லட்சம் ரூபாய் லாட்டரிச் சீட்டை ரமணியிடம் ஒப்படைத்திருக்கிறானே!

ஆவேசத்துக்கிடையில் ரமணி அவளைத் தேடி வீட்டுக்கு வந்த காட்சியும் கண்முன் தோன்றியது. ஒரு கணம் பயத்தில் அடிவயிறு சுருங்கி வலித்தது. லேடி டாக்டர் அம்புஜம் தனக்கு உறவுக்காரி என்றான் அவன். என்ன ஆபரேஷன் என்று தனக்குத் தெரியும் என்று சொல்லாமல் சொன்னான். ரங்கனை மிரட்டிப் பணம் பறிக்க முயன்றால் தான் சும்மா இருக்கப் போவதில்லை என்று பயமுறுத்தினான். கடைசியில் செலவுக்கு நூறு ரூபாயும் கொடுத்துவிட்டுப் போனான். தனத்துக்கு எதிர்ப்பதா, பயப்படுவதா என்று கூடத் தெரியவில்லை.

இரவு முழுவதும் ரங்கன் வராமற் போகவே, அவளுக்கு நம்பிக்கையும் பீதியும் மாறி மாறி வந்தன. டிக்கெட்டுடன் வருவான்! டிக்கெட் கிடைக்காமல் மனம் நொந்து போய்க் குளம் குட்டையில், ஏன் சமுத்திரத்திலே கூட விழுந்திருக்கலாம்.

பொழுது விடிந்தது. ரங்கனைக் காணோம். என்ன செய்ய? ஆபீஸ் நினைவு வந்தது.

ரங்கன் வீட்டுக்கு வராமலிருக்கலாம். ஆனால் நிச்சயமாக ஆபீசுக்குச் செல்லாமல் இருக்க மாட்டான். லாட்டரிச் சீட்டு கிடைத்து விட்டதா இல்லையா என்ற விவரம் அங்கே சென்றால் தெரியும்.

**அ**வள் சரியாக ஒன்பதரை மணிக்கு ஒரு சில்க் புடைவையைக் கட்டிக் கொண்டு, ஒரு ரூபாய் வட்டத்துக்குக் குங்குமத்தை ஒட்டிக் கொண்டு, தலை நிறையச் சாமந்திப்பூவுடன் ஆபீசுக்குப் புறப்பட்டாள்.

நுழைவாயிலிலேயே, மயில்சாமி மடக்கினான்.

''ஏய் தனம், ஒன் புருசன் எங்கே?''

''அந்த ஆளைத் தேடிட்டுத்தான் நாயினா, நாணே வர்றேன்.''

''இன்னா சொல்றெ, கய்தே?''

''ஊட்டுக்கே வரலே.''

''மெய்யாலுமா?''

''பொய்யா சொல்றேன், நாயினா?''

''நீ பொய் சொல்ற பொறுக்கிதானே?''

''மயில்சாமி சத்தம் போடாமல் பேசு!'' என்றாள் சுகந்தி. பிறகு, ''ஓ, நீ ரங்கன் பெண்டாட்டி இல்லே?'' என்றாள்.

அப்பனை விட்டுவிட்டுத் தனம் சுகந்தி அருகே வந்தாள்.

''ஆமாம், கண்ணு... நீ சொகந்திப் பொண்ணுதானே?''

''சொகந்தி இல்லே, சுகந்தி... ஆமாம், நீ எங்கே இங்கே வந்தே?''

''நேத்துலேந்து என் புருசன் ஊட்டுக்கே வரலே, சொகந்தி.''

''ஏன்? உன் மேலே கோபமா?''

''ஹேங்... கோவமா? எம் புருசனுக்கு எப்படிக் கோவிச்சுக்கறதுன்னு தெரியாது.''

''உன் புருசனும் ரமணியும் தோஸ்து. ரமணியைக் கேட்டாத் தெரியும். ஆனா அவரும் ரெண்டு நாளா ஆபீஸுக்கு வரலே. ஏன் நிக்கறே, ஒக்காரு... இந்தப் பொடவை உனக்கு ரொம்ப அழகா இருக்கு.''

''மெய்யாலுமா?''

''ஆமாம். அது சரி, உன் அக்கா இப்ப எப்படி இருக்கா? புருசன் கூட சௌகரியமா இருக்காளா?''

தனம் சிரித்தாள்.

''எனக்கு அக்கா கெடையாது. நான் ஒரே பொண்ணு.''

சுகந்தி மௌனமாய் தனத்தைப் பார்த்தாள். தனம் ஒரே பெண்ணா? அக்கா இருப்பதும் அவளுக்குக் கலியாணமானதும்கூட ஒரு தங்கைக்குத் தெரியவில்லை என்றால் என்ன அர்த்தம்?

மயில்சாமி பலே ஆள்! ராஸ்கல், ரெண்டு சம்சாரம்னு ஒரு தடவை கூடச் சொன்னதில்லை. அடுத்த தடவை கைமாற்றுக் கேட்டு வரும்போது உண்மையைக் கக்க வைக்கலாம்.

தனத்துக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. ரங்கன் ஆபீசுக்கே வரவில்லை. அவனுடைய தோஸ்த்தும் இல்லை.

இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது என்று இப்போது பகிரங்கமாகச் சொல்லவும் அவளால் முடியவில்லை!

''சொகந்திக் கண்ணு, நான் வர்றேன்!'' என்று புறப்பட்டாள் தனம்.

''இனிமே ஆபீஸ் பக்கம் வந்தே, ஒன் காலை ஒடிச்சுப்புடுவேன். ஹாங் ஹாங்!'' என்றான் மயில்சாமி.

''சரித்தான் போய்யா!'' என்று சொல்லிவிட்டு, தனம் வெளியேறினாள்.

(தொடரும்)

''இவ்வளவு பழகிட்டு டெஸ்பாட்ச் பரந்தாமனை உன் கல்யாணத்துக்குக் கூப்பிடாம விட்டுட்டியே, நியாயமா?''

''அவனைப் பத்தி உனக்குத் தெரியாது... என்கிட்டேர்ந்து பத்து ரூபாய் கைமாத்தா வாங்கி, எனக்கே மொய் எழுதிடுவான்...!''

— வி. இ. குமார்.



**யோ**சனையாய்ப் பார்த்தார் கிருஷ்ண மூர்த்தி. அந்த ஃபாக்டரியின் டெபுடி மானேஜர். தீர்க்கமான பார்வை. முப்பது வருட அனுபவம் தந்த முன் வழுக்கை. தன்னம்பிக்கையூட்டுகிற புன்னகை.

மேஜை மீதிருந்த பேப்பர் வெயிட்டை உருட்டியபடியே, தம் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்தவாறு தம் எதிரே இருந்த பரமேஸ்வரனைப் பார்த்தார்.

பரமேஸ்வரன் இளம் எஞ்ஜினியர். புதிதாய் ரெக்ரூட் ஆனவன். ஐ. ஐ. டி. யில் படிப்பு. பின், ஓர் உயர் கம்பெனியில் பயிற்சி




என்று புத்தக அறிவோடு வந்து சேர்ந்திருக்கிறவன். சற்றே நிமிஷத்தில் சூடாகிற இளரத்தம்.

"சொல்லுங்க பரமேஷ். என்ன விஷயம்? எங்கிட்ட தயக்கம் எதுவும் வேணாம். பீ ஃப்ராங்க்!"

பரமேஸ்வரன் ஏதோ பிரச்னையிலிருக்கிறான் என்பதை அவனது அலையும் விழிகளும், அவஸ்தையான முகமும் காட்டிக் கொடுத்தன.

சொல்ல ஆரம்பித்தான் பரமேஷ்.

"வ... வந்து... இட்ஸ் ரிடிகுலஸ் ஸார்... சுந்தரம் ஸார் எப்படி அப்படி ஒரு முடிவு எடுத்தார்னு தெரியலே. வர்ற வாரம் மத்திய அமைச்சர் வந்து திறந்து வைக்க வேண்டிய யூனிட்டுக்காகக் கொண்டு வந்து வைச்சிருக்கிற மெஷின். ஜப்பான் மேக். யாருக்கு அதோட டெக்னிக்கல் நோஹௌ தெரியும்? இவரென்ன என்ஜினியரா...? அந்தக் கால லைசென்ஸியேட். அப்புறமா டிப்ளமா படிச்சு வண்டியோட்டிட்டு இருக்கிறவர்..."

பிரச்னை இதுதான்:

அடுத்த வாரம் மத்திய அமைச்சரைக் கொண்டு முடுக்கிவிட வேண்டிய ஜப்பானிய இயந்திரம். கொஞ்சம் அட்வான்ஸ்ட் டெக்னாலஜி. சுந்தரத்திற்கு இத்தகைய விந்தைகள் பரிச்சயமில்லைதான். ஆர்வம் காரணமாய் அதை இயக்கிப் பார்த்திருக்கிறார். அன்று அனுமதி கேட்க, அவரது மேலதிகாரியான பரமேஷ் எங்கோ விடுப்பில் போயிருந்த சமயம்.

சரியாய் இயங்கிய மிஷினில் எங்கோ கோளாறு. மக்கர் பண்ண ஆரம்பித்து விட்டது! இப்போது ஒருவர் மீது ஒருவர் குற்றம் சுமத்திக் கொண்டு எதிரும் புதிருமாக நிற்கிறார்கள்.

கிருஷ்ணமூர்த்திக்கு மெல்லப் புரிந்தது. பிரச்னைக்குக் காரணம் இயந்திரமல்ல!

வயது!

இருவருக்குமிடையே இருக்கிற அந்தத் தலைமுறை இடைவெளி. எப்படித் தீர்க்கலாம் இந்தப் பிரச்னையை? சுந்தரத்திற்கு இருபது வருட சர்வீஸ். அந்தக் கம்பெனி சிறு குழந்தை போல நடை பயிலத் துவங்கியதிலிருந்தே இருந்து வருகிறார். அதிலும் அவர் இயந்திரங்களோடு பழகுவதைப் பார்க்கச் சுவாரஸ்யமாய் இருக்கும். காலையில் நுழைந்ததும், அதனைத் தொட்டு வணங்கி, மெல்லத் தடவிக் கொடுத்து, அப்புறமாய் இயக்கத் தொடங்கி...

பரமேஷ் குறியாய் இருந்தான்.

"உங்களுக்கு அவரைக் கண்டிச்சு வைக்க இஷ்டமில்லைன்னாச் சொல்லுங்க. ஒரு கால் கடுதாசு குடுத்துட்டுப் போயிடறேன். இந்தக் காலத்துல யங்கர்ஸ்னாலே இளப்பமாப் போச்சு. உசிரைக் குடுத்துப் படிச்ச படிப்பு ஸார்... யாருக்குப் புரியுது ச்சே...!"

"மிஸ்டர் பரமேஷ், உங்கள் எண்ணங்கள் புரியுது. இதைப் பத்தி நான் அப்புறமா முடிவெடுக்கிறேன். பை த பை, எனக்கு ஒரு பத்து நிமிஷம் கம்பெனி குடுக்க முடியுமா?"

ஆழமாய்ப் பார்த்தான். பின் சொன்னான்.

"வித் பிளஷர் ஸார்."

"வாங்க போகலாம்."

**இ**ருவரும் கேண்டீன் நோக்கி நடந்தார்கள். காதுகளுக்குப் பழகிவிட்ட இயந்திர இரைச்சல்கள். தேசபக்தனின் காதுகளில் படுகிற தேசிய கீதம் போல ஒவ்வோர் ஒலியும் ஒவ்வொரு டெஸிபலில் ஒரு ரகசியச்

விஜயாநிலா



சேதி சொல்லியது.

"நான் இப்ப ஓர் அதிகாரியா உங்க கூடப் பேசலை. என்னை உங்க ஃப்ரண்ட்டா நினைச்சுக்கிட்டு என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியுமா, ப்ளீஸ்?"

"ஷ்யூர் ஸார்!"

"நம்ம ஃபோர்மேன் சுந்தரத்துகிட்ட உங்களுக்குப் பிடிச்ச குணம் இருக்கா, சொல்லுங்க பார்ப்போம்."

இப்படியொரு கேள்வியை எதிர்பார்க்கவில்லை அவன். குழப்பமாய்ப் பார்த்தான். யோசித்தான். சொன்னான்.

"இருக்கு ஸார்..."

"குட்... என்ன அது?"

"அவர்கிட்ட இருக்கிற மனிதாபிமான உணர்வுதான் அது. போன மாசம் கூட மிஷின் ஷாப்ல டிராலியில அடிபட்டுட்ட டேவிட்டை உடனே ஹாஸ்பிடலுக்கு அழைச்சுக்கிட்டுப் போய், கூடவே இருந்து கவனிச்சார். இன்ஃபாக்ட் யூனியன்ல இரண்டு பேரும் எதிரெதிர் ஆசாமிங்க."

"வெல் செட் மிஸ்டர் பரமேஷ். இது போதும். வாங்க, போகலாம்."

புரியாமல் பார்த்தான் பரமேஷ்.

சுந்தரம் கொஞ்சம் படபடப்பாய் உள்ளே வந்தார்.

"வாங்க சுந்தரம். உட்காருங்க."

"உக்கார வரலை ஸார். வயசாயிடுச்சு பாருங்க... என் மாதிரி கம்பெனியைத் தெய்வமா நினைச்சு உழைக்கிற அசடுகளை எல்லாம் வெளியில கடாசிடுங்க ஸார். நான் நிறைய உழைச்சாச்சு. போறேன். எதுனா பொட்டிக்கடை வைச்சாக் கூட நாலு காசு பார்க்கலாம்."

அவர் மனம் புரிந்தது.

அமைதியாய்ப் பார்த்தார் கிருஷ்ணமூர்த்தி.

"தெரியும் சுந்தரம். அந்தக் கண்ட்ரோல் ஸிஸ்டம் இன்ஸ்டாலேஷன்தானே...? தெரியும். பதற்றப்படாதீங்க."

"ஆமாம் ஸார். என்னைச் சீட்டுக் கிழிச்சு அனுப்பிடுங்க. உங்களுக்குப் புண்ணியமாப் போயிடும். ஏன்னா நான் பழசாப் போயிட்டேனோல்லியோ...?"

"வெய்ட்... அவசரப்படாதீங்க சுந்தரம். இப்ப நான் ஆபீஸ் சம்பந்தமில்லாத ஒரு விஷயம் கேட்க ஆசைப்படறேன். உங்க மேல மதிப்பு வைச்சுக் கேட்கறேன். சொல்றீங்களா?"

"கேளுங்க ஸார்!"

"நம்ம பரமேஷ் பத்தி உங்க அபிப்பிராயம் என்ன?"

"ஸ... ஸார்..."

''இல்லை. ஆபீஸ் மேட்டரை விடுங்க. பொதுவான கருத்து என்ன? சொல் லுங்க...!''

''பர...மேஷ்... என்ன சொல்றது? பொதுவா ரொம்பத் துடிப்பான பையன். பெரிய படிப்பு எல்லாம் படிச்சிருக்காப்பல இருக்கு. ஆங்... அன்னிக்கி... இன்ஸ்டா லேஷன் அன்னிக்கி அந்த ஜப்பானிய எஞ்ஜினியர்ஸோட ரொம்பப் பொறுமையா இருந்து அந்த மெஷினை இன்ஸ்டால் பண்ணி, நைட் வரை இருந்து வேலை செஞ் சுட்டுப் போன தம்பி அது.''

புன்னகை செய்தார் கிருஷ்ணமூர்த்தி.

''குட். யு ஆர் கரெக்ட் சுந்தரம். இப்பக் கூட காலைல பரமேஷ்கிட்டப் பேசினப்ப உங்களைப் பத்தி ரொம்ப உயர்வாச் சொன் னாரு.''

நம்ப இயலாமல் பார்த்தார் சுந்தரம்.

''யெஸ். ஐ'ம் நாட் ஜோக்கிங். போன மாசம் அந்த மெஷின் ஷாப் ஆக்ஸிடண்ட்ல மாட்டிக்கிட்ட டேவிட்டைக் கண்ணும் கருத் துமாக் கவனிச்சுக்கிட்டீங்களாம். பரமேஷ் சொல்லித்தான் தெரியும்...''

'அவனையா... அவனையா கோபப்பட் டோம்? ச்சே... எத்தனை நல்ல பையன் அவன்?'

சுந்தரம் நெளிந்தார்.

''தப்பு யார் பேரில வேணும்னாலும் இருக்கலாம். ஆனா ஒண்ணு. ரெண்டு பேருமே மெஷினை ஒழுங்கா ஓட வைச்சு ட்ரயல் பார்க்கத்தான் முயற்சி செஞ்சீங்க. இப்ப பழையபடி ஓட வைக்கணும். அடுத்த வாரம் அமைச்சர் வரப் போறாரு. என்ன இருந்தாலும் உங்க எக்ஸ்பீரியன்ஸ் விலை மதிப்பில்லாதது சுந்தரம். ப்ளீஸ்.''

இளகிப் போய் விட்டார்!

அப்புறம்...

இண்டர்காமில் பரமேஷை அழைத்துச் சொல்ல... ''இஸிட். என் மேலே அத்தனை நம்பிக்கையா ஸார் அவருக்கு? அப்படியா சொன்னார்? நான்தான் அவரை அனாவசி யத்துக்கு ஹார்ஷாப் பேசிட்டேன் போலி ருக்கு...?'' என்றான் பரமேஷ் பரவசமாக..

அடுத்த வாரம்...

மத்திய அமைச்சர், அருகே ட்ரே ஏந்திக் கொண்டு நின்ற பெண்ணிடமிருந்து கத்திரிக் கோல் வாங்கி ரிப்பன் வெட்டிப் புதிய யூனிட் டைத் திறக்க – அந்தப் புதிய கண்ட் ரோல் ஸிஸ்டம் முடுக்கி விடப்பட...

அங்கே...

சிநேக பாவத்துடன் அருகருகே சுந்தர மும், பரமேஷும்! கிருஷ்ணமூர்த்தி ஆர்வ மாய்ப் பார்த்தார். அவர்கள் இருவருக்கும் இடையே இருந்த 'வயது' காணாமல் போயி ருந்தது!

---


SANSKRIT THROUGH CORRESPONDENCE

संस्कृतम्

சமஸ்கிருதம்

தபால் மூலம் 6 மாத கால தமிழ்/ஆங்கில வாயிலாக சிறப்புப் பயிற்சி

SANSKRIT THROUGH CORRESPONDENCE

சமஸ்கிருத மொழியை இப்பொழுது நீங்களும் தபால்மூலம் ஆறே மாதங்களில் பேச, எழுத, படிக்க கற்றுக் கொள்ளலாம்.

தேர்ச்சிபெற்ற சமஸ்கிருத பண்டிதர்களால் எளிய முறையில் இயற்றப் பட்ட பாடங்கள் மாதம் ஒருமுறை தபால் மூலம் அனுப்பப்படும். பயிற்சியில் தேர்வு பெற்றவர்களுக்கு Parichaya சான்றிதழ் அளிக்கப்படும்.

ஆங்கிலம்

இலவச பயிற்சி !!!

சமஸ்கிருதம் பயிலும் அனைவருக்கும் ஆங்கிலம் இலக்கண மற்றும் உரையாடற் பயிற்சி இலவசமாக தபால் மூலம் அளிக்கப்படும். ஆங்கில பயிற்சி தேவையில்லாதோருக்கு சமஸ்கிருத புத்தகங்கள், பயிற்சி பாடங்களே தவிர, இலவசமாக அனுப்பப்படும்.

இலவச Prospectus பெற :

Program Officer

INDIANA SANSKRIT ACADEMY

C/o. Indiana Academy of Management Sciences

Post Box 1108, No. 1083, Mettupalayam Road, COIMBATORE - 641 002. Tamil Nadu

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1990



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 வீதம் | ரூ | 750 |

ஆக மொத்தம் ரூ. 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் த்னியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 5 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

# முடிவல்ல; துவக்கம்!

**ம**த்தியான நேரத் தூக்கம் என்பது இப்போதெல்லாம் விடுமுறை நாட்களில் ஒரு வழக்கமாய்ப் போய்விட்டது. கல்யாண மான புதிதில் விடுமுறை நாளென்றால் சரளா வெளியே போக வேண்டும் என்று சொல்லுவாள்.

ஆனால் நரேன் பிறந்த பிறகு அவசிய மில்லாமல் வெளியே போவதேயில்லை. சரளாவும் கேட்பதில்லை.

நரேனை வைத்துக் கொண்டு வெளியே போவது சிரமமான காரியம். சரியான குறும்பு. இப்போது கூட அவன் டேப் ரிக்கார்டரிடம் ஏதோ செய்து கொண்டு இருந்தான். நான் பாயையும், தலையணை யையும் எடுத்துப் போட்டுப் படுத்துக் கொண்டேன்.

சரளா சமையலறையில் பாத்திரமெல் லாம் எடுத்து வைத்து விட்டுக் கூடத்துக்கு வந்தாள். ஃபேனைச் சற்றே அதிகரித்து விட்டு, அவளும் பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள். நரேன் இன்னமும் டேப் ரிக்கார்டரிடம் ஏதோ செய்து கொண்டிருந் தான்.

இன்று கொஞ்சம் அதிகமாகவே சாப் பிட்டு விட்டேன் போலிருக்கிறது. உள்ளே போன சாப்பாட்டு அழுத்தத்தில் சீக்கிரமா கவே தூக்கம் வரக் கண்களை மூடினேன்.

"**எ**ன்னங்க, என்னங்க.. எழுந் திருங்க..." திடீரென்று சரளா உலுக்கி எழுப்பினாள். சுவர்க் கடியாரத்தைப் பார்த் தேன். மணி நாலு ஆகியிருந்தது. பாதித் தூக்கத்தில் எழுந்ததில் கண்கள் 'ஜிவ்' வென்று எரிந்தன. கரண்ட் போய் ஃபேன் நின்றிருந்தது.

"என்ன?" என்றேன் எரிச்சலோடு.

"நரேன் கிச்சனுக்குள்ள போயி உள் பக்கமாத் தாப்பாள் போட்டுக்கிட்டாங்க.." என்று பதறியபடி கூறினாள்.

அவள் சொன்னதன் அர்த்தம் எனக்குச் சரியாய்ப் புரிய அரை நிமிடம் பிடித்தது. நரேன் கிச்சனுக்குள் சென்று விளையாட் டாகக் கதவை உள் பக்கமாகத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு விட்டான். இப்போது அவனுக்குக் கதவைத் திறக்கத் தெரியாது. அந்தக் கிச்சனுக்கு வேறு வழிகளும் இல்லை. வெளிப்புறமாய் ஒரு ஜன்னல் மட்டும்தான் உண்டு.

உள்ளே நரேன் அழுவது கேட்டது. வீட் டைச் சுற்றிக் கொண்டு ஓடிப் போய் வெளிப் பக்க ஜன்னல் வழியாகப் பார்த்தேன். பின் னாலேயே சரளாவும் ஓடி வந்தாள். நரேன் அந்தக் கதவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு, கையைக் காலை உதறிக் கொண்டு அழுது கொண்டிருந்தான். தாழ்ப் பாள் முழுதாகப் போடப்பட்டிருந்தது.

"டேய் நரேன். அந்தத் தாப்பாளை மேல தூக்கி இந்தப் பக்கமா இழுடா. தொறந்து டும்.." சரளா கத்தினாள். ஒன்றரை வயதுக் குழந்தைக்கு என்ன புரியும்? குரல் கேட்டவு டன் "அம்மா" என்று அழுது கொண்டு, ஜன்னல் பக்கமாக ஓடி வந்தான். சரளா வும் அழ ஆரம்பித்து விட்டாள்.

எனக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை. இதற்குள் பக்கத்து வீடு, எதிர்த்த வீடு என்று ஆட்கள் வர ஆரம்பித்தனர். எனக்கு எரிச்சலாக வந்தது.

"அவன் உள்ளே போனப்ப நீ என்னடி பண்ணிக்கிட்டு இருந்தே?" சரளாவிடம் கத்தினேன்.

"நானும் தூங்கிட்டேங்க. இப்ப அவன் அழுற சத்தம் கேட்டுத்தாங்க நானும் எழுந் தேன்..." என்று அழுகையினூடே கூறி னாள்.

நோ. இப்போது கோபம் கூடாது. சரளா ஏற்கெனவே பயந்திருக்கிறாள். முதலில் அவளைத் தேற்ற வேண்டும். "பயப்படாதே. ஒண்ணும் ஆகாது. கதவை உடைச்சாவது உள்ள போயிடலாம், தைரியமா இரு..." என்று அவளிடம் கூறினேன்.

"கடப்பாரையால கதவை ரெண்டு அடி போட்டா உடைஞ்சிடும்!" பக்கத்து வீட்டுக் காரர் ஐடியா கொடுத்தார். சே! உடனே கதவை உடைக்கத்தான் வேண்டுமா? எரிச் சலை அடக்கிக் கொண்டேன்.

"நோ. நோ. அவசரப்பட வேண்டாம். அதைக் கடைசிப் பட்சமா வச்சுக்கலாம். முதல்ல வேற ஏதாச்சும் வழி இருக்குதான்னு பார்ப்போம்," என்றேன். இன்று முழுவதும் பொறுமையாக இருக்க வேண்டும் என்று அந்தக் கணத்திலேயே தீர்மானித்துக் கொண்டேன்.

**ப**க்கத்து வீட்டு மாமி, எதிர்த்த வீட்டு லுங்கி கட்டிய பையன், கோடியிலுள்ள பெட்டிக் கடைக்காரர் என ஆளுக்கு ஆள் ஒவ்வோர் ஐடியா கொடுக்க ஆரம்பித்தனர். கடைசியாக எல்லோருமாய்ச் சேர்ந்து ஒரு முடிவுக்கு வரும் போது மணி ஐந்தாகி விட்டது. நரேன் இன்னும் ஜன்னலோரத் தில் நின்று கொண்டு தேம்பிக் கொண்டு இருந்தான். கரண்ட் இன்னும் வரவில்லை!

ஓர் ஒட்டடைக் குச்சியின் ஓரத்தில் ஒரு கம்பியைக் கொக்கி மாதிரி வளைத்துக் கட்டி, ஜன்னல் வழியாக நுழைத்து, தாழ்ப்

ஸ்ரீ ராஜாராம்

பாளை நெம்பித் திறக்கலாம் என முடிவு செய்யப்பட்டது.

எங்க வீட்டு ஒட்டடைக் குச்சியும் கிச்சனுக்குள் தான் இருந்தது. பக்கத்து வீட்டு ஒட்டடைக் குச்சியை வாங்கி, கம்பியை வளைத்துக் கட்டி, கொக்கி போல் செய்து ஜன்னலை நெருங்கும்போது, மணி ஐந்தரை ஆகி விட்டது. நரேன் ஜன்னலோரத்தில் மூலையில் தேம்பிக் கொண்டே படுத்து விட்டான்.

நல்ல வேளையாக ஜன்னல் வாகான இடத்தில் இருந்தது. குச்சியை உள்ளே நுழைத்து, தாழ்ப்பாளுக்குக் கீழே வரும்படி செய்து நெம்பினேன். கொக்கி கொஞ்சம் லூசாக இருந்ததால் கொக்கி கழன்று விடும் போலத் தோன்றியது. அதனால் குச்சியை வெளியே எடுத்தேன்.

சுற்றி இருந்தவர்கள் "ப்ச்! ப்ச்!" என்றனர். வந்த எரிச்சலை அடக்கிக் கொண்டு, கொக்கியை மீண்டும் இறுக்கிக் கட்டினேன். பின்பு மீண்டும் உள்ளே நுழைத்தேன்.

இந்த முறை தாழ்ப்பாளை மேல்நோக்கி நகர்த்த முடிந்தது. "ஆங் அப்படித்தான்," "இன்னும் கொஞ்சம்" "இன்னும் மேலே..." என்று சுற்றியிருந்தவர்கள் கத்திக்கொண்டே இருந்தனர்.

தாழ்ப்பாளை மேலே தூக்கி நிறுத்தியாயிற்று. இப்போது இந்தப் புறமாய் இழுக்க வேண்டும். குச்சியை வெளியே எடுத்து, கொக்கியை இழுப்பதற்கேற்ப மாற்றியமைத்து, மீண்டும் உள்ளே நுழைத்தேன்.

தாழ்ப்பாளில் கொக்கியை மாட்டி இழுக்கையில் நல்ல பிடிப்பு விழாததால், கொக்கி நழுவி விட, தாழ்ப்பாள் 'லொடக்' கென்று கீழே விழுந்து பழைய நிலைக்கே வந்து விட்டது.

நான் வெறுத்துப் போனேன். சுற்றியிருந்தவர்கள் கமெண்ட் அடிக்க எனக்கு வெறுப்பு அதிகமாயிற்று. வாட்சைப் பார்த்தேன். ஆறு மணி ஆகி விட்டது.

அறைக்குள் வெளிச்சம் குறைய ஆரம்பித்து விட்டது. நரேன் அந்த மூலையிலேயே தேம்பிக் கொண்டே, தூங்கிப் போய் விட்டான். அதைப் பார்த்துச் சரளா இந்தப் பக்கம் புலம்பினாள். எனக்குச் சரளாவின் மீதும் நரேனின் மீதும் அர்த்தமில்லாமல் கோபம் வந்தது.

கதவை உடைத்து விடலாம் என்று தோன்றியது. எனக்கு எப்படியாவது இந்தக் கலாட்டா முடிந்தால் போதும் என்று ஆகி விட்டது. இன்றைக்கு என்று பார்த்து கரண்ட் வேறு இல்லை. அறைக்குள் இருட்டு அதிகமாகி விட்டது. உடனடியாக ஏதாவது செய்ய வேண்டும். என்ன செய்வது என யோசித்தேன்.

கதவை உடைக்கும் எண்ணத்தை வலுக்கட்டாயமாகத் தள்ளி வைத்தேன். மறுபடியும் ஒருமுறை குச்சியால் முயற்சி செய்து விட்டு, முடியா விட்டால் கதவை உடைக்க






| | |
|---|---|
| Text Book of Dynamics (Seventh Edition) | Rs. 40.00 |
| Text Book of Statics (Fifth Edition) | Rs. 35.00 |
| (Both by Dr. M.K. Venkataraman) (A. C. College of Engg. and Tech. Karaikudi.) | |
| அகஸ்தியர் தமிழ் இலக்கிய வரலாறு (Dr. அரங்கசாமி) | Rs. 10.00 |




| (Contains Both Tamil and English Meaning) | Rs.P. |
|---|---|
| Agasthiar Prathamic Complete Guide (New Revised) | 15.00 |
| Agasthiar Madhyama Complete Guide (New Revised) | 25.00 |
| Agasthiar Madhyama A.H. Reader II-Guide | 10.00 |
| Agasthiar Madhyama A.E. Sangrah & B. Milap Guide | 8.00 |
| Agasthiar Madhyama Prayog - II Guide | 6.00 |
| Agasthiar Rashtrabasha Complete Guide (G.S.I.) | 30.00 |
| Agasthiar Rashtrabasha Complete Guide (A.H.R. III) | 35.00 |
| Agasthiar Rashtrabasha A.H. Reader III Guide | 8.00 |
| Agasthiar Rashtrabasha Kavya Sudha I Guide | 5.00 |
| Agasthiar Praveshika Complete Guide | 50.00 |
| Agasthiar Praveshika Gadya Sankalan II Guide | 10.00 |
| Agasthiar Praveshika Kavya Manjusha Guide | 8.00 |
| Agasthiar Praveshika Jamanalal Guide | 6.00 |
| Agasthiar Praveshika Agnishika Guide | 8.00 |
| Agasthiar Praveshika III Paper Guide | 20.00 |
| Agasthiar V. Purvardh Gadya Kusum-3 Guide | 10.00 |
| Agasthiar Nirmala Guide-(for V.P. & B.A., B.Sc.) | 8.00 |
| Agasthiar V. Purvardh Madhu Manjari Guide | 8.00 |
| Agasthiar V. Purvardh II Paper Guide | In Print |
| அகஸ்தியர் ப்ரவேசிகா தமிழ்மாலை I & II உரை நூல் | 12.00 |
| அகஸ்தியர் V.P. இலக்கிய கனிகள் உரை நூல் | 5.00 |
| அகஸ்தியர் V.P. ஒப்பும் உணர்வும் உரைநூல் | 5.00 |
| அகஸ்தியர் V.P. மலர்ச்செண்டு உரைநூல் | 8.00 |
| அகஸ்தியர் ப்ரவீண் பூர்வார்த்த தமிழ் உரை நூல் | 18.00 |
| Agasthiar Hindi Grammar Guide | 6.00 |

For all kinds of Hindi Text Books and Guides, Please Write to us !

**Agasthiar Book Depot**

POST BOX No. 334 PHONE : 26061
NANDHIKOIL STREET,
TEPPAKULAM, TIRUCHY — 620 002.

MADRAS STOCKISTS : Sree Sudarsan Agencies, 13, Pudupet Street, Alandur, Madras - 600 016
Chandra Book Centre, 48/10, Kuppiah Street, West Mambalam, Madras - 600 033.

லாம் என முடிவு செய்தேன்.

டீ.வி.யில் சினிமா பார்ப்பதற்காகப் பலரும் கரண்ட்டுக்காகக் காத்திருந்தனர். காத்திருக்கையில் பொழுது போவதற்காக என் வீட்டருகே நின்றிருந்தனர்.

மறுபடியும் குச்சியை விட்டுத் தாழ்ப்பாளை நெம்பி நிறுத்தினேன். எதிர் வீட்டு லுங்கிப் பையன் டார்ச் அடித்தான். கொக்கியின் பொஸிஷனை மாற்றித் தாழ்ப்பாளில் மாட்டி இழுக்கையில் இந்த முறை பிடிமானம் சரியாக விழ, தாழ்ப்பாள் திறந்து கொண்டது.

''கதவு தொறந்திடுச்சு'' என்று லுங்கிப் பையன் பெரிய குரலில் கத்தினான். சரளா அதைக் கேட்டவுடன் தடதடவென கிச்சனுக்குள் ஓடினாள். மூலையில் தூங்கிக் கொண்டிருந்த நரேனை எடுத்துச் சரமாரியாக முத்தமிட்டாள். நரேனும் சரளாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

சுற்றியிருந்தவர்கள் எல்லோரும் ஏதோ சினிமா பார்ப்பது போல் பார்த்துக் கொண்டு நின்றார்கள். எனக்கு இன்னும் இந்தக் கலாட்டா முடிந்ததாகத் தோன்றவில்லை. இவர்கள் எல்லோரும் போக வேண்டும். அப்போதுதான் இது முடியும்.

அந்தச் சமயத்தில் கரண்ட் வர, நான் சுவிட்சுகளை ஆன் செய்தேன். வீடு பிரகாசமானது. அங்கிருந்தவர்களில் பலரும் தங்கள் வீட்டிற்கு டீ.வி. பார்க்க விரைந்தனர். எங்கள் வீட்டு டீ.வி.யும் போடப்பட்டது.

மிஞ்சி இருந்தவர்களுக்குச் சரளா காப்பி போட்டுக் கொடுத்தாள். எல்லோரும் நரேனைப் பற்றி அது இது என்று கூறினர். மேலும், தம் வாழ்க்கையில் நடந்த இது போன்ற அனுபவங்களைக் கூறினர். யாரும் பார்க்காத போதும் டீ.வி. பாட்டுக்கு ஓடிக் கொண்டு இருந்தது. நரேன் பால் குடித்து விட்டுத் தூங்கிப் போயிருந்தான்.

சினிமாவும், செய்திகளும் முடிந்த பின் தான் எல்லோரும் திரும்பிப் போனார்கள்; அவர்கள் போனதும் டீ.வி.யை அணைத்தேன். ''இனிமேல்தான் ஏதாவது சமைக்கணும்'' என்று சொல்லி விட்டுச் சரளா கிச்சனுக்குள் போனாள்.

நான் தூங்குகின்ற குழந்தையைப் பார்த்தேன். ஒருவழியாக எல்லா கலாட்டாவும் முடிந்தது என்று எண்ணினேன்.

அப்போது சரளா உள்ளிருந்து வந்து, ''குழந்தை நல்லபடியாக் கிடைச்சாத் திருப்பதிக்கு வர்றதா வேண்டிக்கிட்டு இருக்கேங்க. நீங்க எப்பச் சொல்றீங்களோ அப்பப் போகலாம். ஆனா ஒண்ணு. திருப்பதி வேண்டுதல். போய்த்தான் ஆக வேண்டும்..'' என்று சொல்லி விட்டு என் பதிலை எதிர்பார்க்காமல் மீண்டும் உள்ளே போய் விட்டாள்.

ஸோ, இது இன்னும் முடியவில்லை. திருப்பதி வரை தொடர்கிறது!

வி. என். குமாரசாமி

# வில்லேறிய நாணும் விண்ணென்ற உடலும்

சென்ற வாரம் கூறப்பட்ட முதல் படி பற்றி மறுமுறை படித்துக் கொள்ளவும்.

தனுராசனத்தில் இரண்டாவது படி: தனுராசனத்தில் இருந்தவாறே, முன்னும் பின்னுமாகச் சரீரத்தைக் குழந்தைகளின் ஆட்டும் குதிரை போல் ஆட்ட வேண்டும். இதையும் மூன்றிலிருந்து ஆறு தடவை வரை செய்யலாம்.

மூன்றாவது படி: மேற்சொன்னவாறு முன்னும்பின்னுமாக ஆட்டிய பிறகு ஆசனத்தைக் கலைத்துவிடாமல் இடது கைப்பக்கமாகவும் வலது கைப்பக்கமாகவும் சரீரத்தைத் திருப்ப வேண்டும். இம்மாதிரியும் மூன்றிலிருந்து ஆறு தடவை வரை செய்யலாம்.

முதலில் தனுராசனத்தில் நின்று, பிறகு முன்னும்பின்னுமாக மூன்று தடவைகளோ, ஆறு தடவைகளோ செய்து, பக்கவாட்டிலும் மூன்று முதல் ஆறு தடவை வரை செய்தால் ஒரு தடவை தனுராசனம் செய்த மாதிரி. இப்படி அவரவர் வசதி போல் மூன்று முதல் ஆறு தடவை வரை தனுராசனம் செய்யலாம்.

அதிக கனமுடையவர்களுக்கும் பெருந்தொந்தி உடையவர்களுக்கும் இது செய்வது கஷ்டமாக இருக்கும். ஆனால் அவர்கள் தாம் இதனைக் கட்டாயமாகச் செய்ய வேண்டும். கனமானவர்களுக்கு மட்டுமின்றி ஒல்லியாக இருப்பவர்களுக்குக் கூட

* தனுராசனம்: முதல் படி.

ஆரம்பத்தில் சரியாகச் செய்ய வராது. சிலருக்குக் கால்களை மடித்துக் கைகளால் பற்ற எட்டாது. சிலருக்கு ஒரு காலை மட்டும் தான் பிடிக்க வரும். இரண்டாவது காலைப் பிடிக்க முடியாது. சதைகள் கனத்துப் போய் மடிக்க முடியாமல் இருப்பதே இதற்குக் காரணம். இவர்கள் இன்னொருவரின் உதவியுடன் ஆசனம் செய்ய முயற்சி எடுக்க வேண்டும். எட்டாத காலை மெதுவாகப் பிடித்துக் கொடுக்கச் சொல்லிச் சில நாட்கள் வரை பிடித்துப் பழகலாம். அப்படிச் செய்து வந்தால் நாளடைவில் தானாகவே பிறர் உதவியின்றிச் செய்ய வரும். சிலருக்குத் துடை மேலே எழும்பாது. கையில் அகப்பட்ட கால் நழுவ ஆரம்பிக்கும். மனம் தளரக் கூடாது. விடாமுயற்சியுடன் தினமும் பழகி வந்தால், சில நாட்களில் சரியாகி விடும்.

சிலருக்குக் கால் நரம்புகள் வலிக்கும். கைகள் கூட வலிக்கும். வலிக்க வலிக்கச் செய்யக் கூடாது. தளர்த்தி விட்டுவிட வேண்டும். மறுபடியும் செய்து பார்க்க வேண்டும். நான்கைந்து நாட்களில் வலிகள் மறைந்துபோகும். சுகம் உண்டாகும். சிலருக்கு வயிற்றைக் கூட வலிக்கும். முக்கியமாகப் பெண்களுக்குக் கர்ப்பப்பை பலவீனமாக இருந்தால் முதலில் சற்று வலிக்கும். வலிக்க வலிக்கப் பிடிவாதத்துடன் செய்யக் கூடாது; வலிக்கிறதே என்று விட்டுவிடவும் கூடாது. படிப்படியாகச் சிறிது சிறிதாக உடலை நம் வசப்படுத்த வேண்டும். உடல் நாளடைவில் வளைந்து கொடுக்கும். நாம் சொன்னபடியெல்லாம் கேட்கும்.

**த**னுராசனத்தால் ஏற்படும் பலன்கள்: வயிற்றில் உள்ள உறுப்புக்கள் மிக நன்றாக நசுக்கப்படுவதால் எல்லாமே புத்துயிர் பெறு

* இரண்டாம் படி





* மூன்றாம் படி.

இன்றன. ரத்த நாளங்களில் புது ரத்தம் பாய்ந்து வயிற்றுக் கொழுப்புக்கள் ஊளைச் சதைகளைக் கரைக்கும். இரைப்பை பலம் பெறும். சிறுகுடல், பெருங்குடல் ஸ்பிளீன் எனப்படும் கணையம், லிவர் எனப்படும் கல்லீரல் பான்கிரியாஸ் எனப்படும் இன்ஸுலின் சுரப்பி, சிறுநீரகங்கள், சிறுநீர்ப்பை, மலக்குழாய், சுக்கிலப்பை, பெண்களுக்குக் கர்ப்பப்பை ஆகிய எல்லாவற்றுக்கும் புது ரத்தம் பாய்ந்து ஆரோக்கியம் வீர்யம் பெறுகிறது. முதுகெலும்பின் நடுப்பாகம் வளையும் தன்மை அடைவதால் இளமை ஓங்கும். வில்லேறிய நாணாக உடல் விண்ணென்று இருக்கும்.

பிரசவித்த பின் மற்ற ஆசனங்கள் செய்து கர்ப்பப்பை உறுதியான பிறகுதான் தனுராசனம் பழகலாம். அதாவது பிரசவித்து நாலு, ஐந்து மாதங்களுக்குப் பிறகுதான் செய்யலாம். தனுராசனம் வழக்கமாகச் செய்து வரும் பெண்களுக்குக் கர்ப்பப்பை உறுதி அடைவதால் கருச்சிதைவே ஏற்படாது. குறைப் பிரசவம் உண்டாகாது. வீட்டு விலக்கு சீர்ப்படும். வீட்டு விலக்கின் போது ஏற்படும் மனச்சோர்வு, தலைவலி போன்றவை தோன்றாது.

இதற்கெல்லாம் மருந்துக்கும் மாத்திரைக்கும் கொட்டி அழுவார்கள், சிலர். தேவையே இல்லை. ஆர்வமாகவும் மன உறுதியோடும் கொஞ்சம் கொஞ்சமாக ஆசனம் போட்டுப் பழகி முன்னேறினால் மருந்தும் மாத்திரையும் வேண்டாம். டாக்டர் வீட்டின் வாசல் அறையில் காத்திருக்கவும் வேண்டாம்.

ஓர் எச்சரிக்கை:

உங்களுக்கு ஆபரேஷன் ஏதாவது நடந்திருந்தால் எந்த ஆசனமானாலும்சரி, ஆசன நிபுணர்களின் நேரடி ஆலோசனையின் பேரிலேயே ஆசனங்களைச் செய்யத் தொடங்க வேண்டும்.

டயாபெடிஸ் என்ற பிரபலமான நீரிழிவு நோய் பற்றி இன்று அறியாதவர்கள் கிடையாது. இந்த நோய் இல்லாதவர்கள் கூட இதனால் அவதிப்படுகிற நண்பர்கள் அல்லது உறவினர்கள் பற்றி அறிந்திருப்பார்கள். இந்த டயாபெடிஸ் நோய் வராமல் தடுக்கவும், வந்தவர்களுக்குக் குணமளிக்கவும் தனுராசனத்துக்கு விசேஷச் சக்தி இருக்கிறது. இது விஞ்ஞான பூர்வ உண்மை. இதுபற்றிச் சற்று விளக்கமாகவே அடுத்த இதழில் பார்ப்போம்.

(தொடரும்)

---

ஓர் இரவு இரு குடியானவர்கள் ரயிலில் பம்பாய் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை ஒரு டிக்கெட் பரிசோதகர் டிக்கெட் கேட்க, அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துப் பேந்தப் பேந்த விழித்தனர். அதனால் அவர்களை 'தானே' ஜங்ஷனில் ரயிலிலிருந்து இறக்கி 'லாக் அப்' அறையில் தங்க வைத்தார்



பரிசோதகர். மறுநாள் முன் காலையிலேயே எழுந்த குடியானவர்கள், டிக்கெட் பரிசோதகரையும் எழுப்பினார்கள். திடுக்கிட்டு எழுந்த பரிசோதகரிடம், இரண்டு டிக்கெட்டுகளைக் காட்டித் தங்களை உடனே விடுவிக்கும்படி கேட்டுக் கொண்டனர். ''நேற்றே ஏன் காட்டவில்லை? '' என்று அவர் கோபமாகக் கேட்ட போது, ''நாங்கள் நிறையப் பணத்துடன் டிராக்டர் வாங்க பம்பாய் வந்தோம். பணத்துடன் ஏதாவது லாட்ஜில் தங்கப் பயமாயிருந்தது! நீங்கள் எப்படியும் பாதுகாப்பான இடத்தில் படுக்க வைப்பீர்கள் என்று தெரியும் அதனால்தான் டிக்கெட்டைக் காட்டவில்லை'' என்றனர்!

— ராஜீவி நரசிம்மன்.

D.ராமாநாயுடு

# அன்புச் சின்னம்

இளையராஜா



